
CHANDAMAMA

**Statement about ownership of** AMBULIMAMA (Tamil)
**Rule 8.(Form VI), Newspapers (Central) Rules, 1956**

| | |
|---|---|
| *1. Place of Publication* | 'CHANDAMAMA BUILDINGS'<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *2. Periodicity of Publication* | MONTHLY<br>Ist of each calender month |
| *3. Printer's Name* | B.V. REDDI |
| *Nationality* | INDIAN |
| *Address* | Prasad Process Private Limited<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *4. Publisher's Name* | B.VISWANATHA REDDI |
| *Nationality* | INDIAN |
| *Address* | Chandamama Publications<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *5. Editor's Name* | B.NAGI REDDI |
| *Nationality* | INDIAN |
| *Address* | 'Chandamama Buildings'<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *6. Name and Address of individuals who own the paper* | CHANDAMAMA PUBLICATIONS<br>PARTNERS:<br>1. Sri B. VENKATRAMA REDDY<br>2. Sri B.V. NARESH REDDY<br>3. Sri B.V. SANJAY REDDY<br>4. Sri B.V. SHARATH REDDY<br>5. Smt. B. PADMAVATHI<br>6. Sri B.N. RAJESH REDDY<br>7. Smt. B. VASUNDHARA<br>8. Kum. B.L. ARCHANA<br>9. Kum. B.L. ARADHANA<br><br>'Chandamama Buildings'<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |

I, B Viswanatha Reddi, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

1st March 1997

**B. VISWANATHA REDDI**
*Signature of the Publisher*



**திருமதி பி. சேஷம்மா (1916 - '97)**

திருமதி பி. சேஷம்மா. அவருடைய மனது மென்மையானது... அதைவிட புன்முறுவலுடன் பிறருக்கு உதவ வேண்டும் என்கிற அவருடைய மனித நேயம் சிறந்தது; மறக்க இயலாதது.

தம்முடைய மனவருத்தங்களை வெளியே காட்டிக் கொள்ளாமல்... பிறருடைய பிரச்னையை தீர்த்து வைப்பதிலேயே கண்ணுங் கருத்துமாக இருப்பார்.

எல்லாரும் ஒரே குடும்பமாக இருக்க வேண்டும் என்பதையே விரும்பிய அந்த அன்புத் தாய் திருமதி பி. சேஷம்மா, எங்களை தனிமைப் படுத்தி மீளாத துயரில் ஆழ்த்தி விட்டு கடந்த ஜனவரி மாதம் 12ந் தேதி இறைவன் திருவடி சேர்ந்தார்.

ஒவ்வொரு ஆணுக்குப் பின்னும் வெற்றியில் ஒரு பெண் இருப்பார் என்று சொல்வார்கள். எவ்வளவு சத்தியமான வாக்கு இது! விஜயா - வாகினி, சந்தமாமா நிறுவனங்களின் அதிபர் திரு. பி. நாகிரெட்டி அவர்களின் வெற்றிக்கு பின்னணியில் கடந்த 63 ஆண்டுகளாக இருந்து ஊக்குவித்தார் திருமதி பி. சேஷம்மா.

ஒருவரை ஒரு தடவை பார்த்தால் போதும்... எத்தனை ஆண்டுகள் கழித்து அவரைப் பார்த்தாலும் அவரிடம் அதே புன்முறுவலுடன் நலம் விசாரிப்பார்...

'குறைவான பேச்சு... நிறைய செயல்கள்' என நிறைவாக வாழ்ந்த அந்தத் தாய் இல்லாத குறையை வார்த்தைகளால் விவரிக்க இயலாது. ஆனாலும், அவர் அமைத்துக் கொடுத்த பாதையில் முயற்சி செய்வதுதான் அவருக்கு நிரந்தர நினைவுச் சின்னம் என எங்களது ஆழ்ந்த அஞ்சலியை செலுத்துகிறோம்.

**—நிர்வாகம்**




# அம்புலிமாமா

நிறுவனர்: **'சக்கரபாணி'** நிர்வாக ஆசிரியர்: **நாகிரெட்டி**

## கலையும் கற்பனைத் திறனே!

கல்வி புகட்டுவதில் ஆராய்ச்சி செய்யும் நிறுவனம் 'என் சி இயார் டி'. அது குழந்தைகள் ஓவியம் வரைய ஊக்க மளிக்க வேண்டும் எனக் கூறி பத்தாவது வகுப்பு வரை ஓவியம் வரைதலை ஒரு பாடமாகச் சேர்க்க வேண்டுமெனப் பரிந்துரை செய்துள்ளது. இந்நிறுவனத்தின் மேற்பார்வையிலுள்ள பள்ளிகள் அவ்வாறு செய்த போதிலும் பல பள்ளிகள் இதை ஒரு வகுப்புப் பாடமாகச் சேர்க்கவில்லை.

சில பள்ளிகள் ஓவியம் வரைய நேரம் ஒதுக்கி இருந்தாலும் ஓவிய ஆசிரியர்களை நியமிக்காமல் வேறு ஆசிரியர்களை அந்த வகுப்புகளுக்கு அனுப்புகின்றன. அவருக்கு சித்திரம் வரையத் தெரியாததால் எப்படியோ அந்த வகுப்பு நேரத்தைக் கழித்து விட்டுச் செல்கிறார். இது வீண்தானே!

ஓவியம் வரைவதால் சிறுவர் சிறுமியரின் கற்பனை வளரும். அவர்களுக்கு எதையும் கூர்ந்து கவனிக்கும் திறன் ஏற்பட்டு விடும் எனவே இக்கலையில் ஆர்வம் கொண்டுள்ள மாணவ மாணவிகளை இதை நன்கு பயில ஊக்குவிக்க வேண்டும். பெற்றோர்கள் இவ்வாறு ஊக்குவித்தால் அவர்களது மக்களின் திறன் கூடுமேயல்லாது சற்றும் குறையாது இப்படிச் செய்யத் துணிந்து முன் வருவார்களா?

**மதிமுகம்: 100** **மார்ச் 1997** **புன்னகை: 3**

**தனிப்பிரதி: ரூ.6.00** **வருட சந்தா: ரூ.72.00**



செய்திகளும் தகவல்களும்

# அமெரிக்க ஜனாதிபதி

அமெரிக்கா ஜனாதிபதியின் வெள்ளை மாளிகையில் இரண்டாவது முறையாக ஜனாதிபதியாகப் பதவிப் பிரமாணம் செய்த பின் வில்லியம் ஜெப்பர்ஸன் க்ளின்டன் தான் 20வது நூற்றாண்டிலும் 21வது நூற்றாண்டிலும் இருந்து வரும் ஜனாதிபதி எனக் கூறினார். ஆம் அவர் இந் நூற்றாண்டின் இறுதியிலும் அடுத்த நூற்றாண்டின் தொடக்கத்திலும் ஜனாதிபதியாக இருப்பவரே. 42வது அமெரிக்க ஜனாதிபதி யான பில் க்ளிண்டன் இரண்டாவது உலகப் போருக்குப் பின் இரு முறை தேர்ந்தெடுக்கப்பட்ட டெமகிரெட் கட்சியைச் சேர்ந்த ஜனாதி பதி என்ற பெருமையையும் பெற்றவர்.

அமெரிக்காவின் ஜனாதிபதிப் பதவிக்கு இருமுறை டெமகிரடிக் கட்சி வேட்பாளர் தேர்ந்தெடுக்கப்பட்டது இதற்கு அறுபது ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்தது. 1932ல் முதன் முறையாக தேர்ந்தெடுக்கப்பட்ட ப்ராங்க்ளின் டிலானோ ரூஸ் வெல்ட் மீண்டும் அப்பதவிக்கு 1936ல் தேர்ந்தெடுக்கப்பட்டதோடு அடுத்தடுத்தும் தேர்ந்தெடுக்கப்பட்டார். நான்காவது முறையாக 1944ல் தேர்ந்தெடுக்கப்பட்ட அவர் பதவிக் காலத்திலேயே 1945 ஏப்ரல் 12ல் காலமானார்.

ரூஸ் வெல் டிற்குப் பின் ஹாரி. எஸ். ட்ரூமன் 1945ல் அமெரிக்க ஜனாதிபதியானார். 1960ல் டெமகிரெடிக் கட்சி வேட்பாளர் ஜான் கென்னடி வெற்றி பெற்று ஜனாதிபதியானார். ஆனால் 1963 நவம்பர் 23ல் அவர் கொலை செய்யப்பட்டார். அவருக்குப் பின் லிண்டன் பி. ஜான்சன் (டெமகிரெடிக்) ஜனாதிபதியானார். அவருக்குப் பின் டெமகிரெடிக் கட்சி சார்பில் ஜனாதிபதியானவர் ஜிம்மி கார்டர் (1977 - 1991).

1992ல் முதல் முறையாக ஜனாதிபதியான பில் க்ளின்டன் 1993 ஜனவரி 22ல் பதவி ஏற்றார். நூறு ஆண்டுக்கு முன் அதாவது இருபதாவது நூற்றாண்டின் ஆரம்பத்தில் அமெரிக்க ஜனாதிபதியாக இருந்தவர் ரிபப்ளிகன் கட்சியைச் சேர்ந்த வில்லியம் மெக்ளினெல்.

1996ல் நடந்த தேர்தலில் க்ளின்டனுக்கு 49 சத வாக்குகள் கிடைத்தன. அவரை எதிர்த்த ரிபப்ளிகன் கட்சி வேட்பாளர் ராபர்ட் டோலுக்கு 41 சத வாக்குகளே கிடைத்தன. சுயேட்சை வேட்பாளர் தாஸ்பிரட் 8 சத வாக்குகள் பெற்றார்.

ஜனவரி 21 ல் பதவி ஏற்ற க்ளின்டன் தனது முதல் சொற்பொழிவில் நாட்டின் ஒருமைப்பாட்டை வலியுறுத்தினார். அமெரிக்கா ஒரே நாடு, ஒரு தாய் மக்கள், ஒரே நோக்கம் என்ற குறிக் கோளுடன் பணியாற்றப் போவதாக அவர் அறிவித்தார். ஆடம்பரமில்லாமல், ஒளிமயமான அமெரிக்க சுதந்திர ஜோதியை உலகெங்கும் பரப்பப் போவதாக அவர் அறிவித்துள்ளார். இவ்வாறு 21வது நூற்றாண்டில் மக்களின் சமத்துவ உலகத்தை உருவாக்குவதே க்ளின்டனின் நோக்கம்.





# சிவஞானத்தின் அறிவுரை!

சிவப்பூர் சிவஞானம் சிறந்த அறிவாளி. அவரது சிறப்பு என்னவென்றால் யாராவது ஒருவன் பிறரை ஏமாற்றினால் அப்படி ஏமாற்றியவனை ஏமாற்ற வழி கூறுவதுதான். ஒருமுறை சுப்பா சாஸ்திரி என்ற புரோகிதர் முத்தப்பன் என்பவன் வீட்டில் விசேஷ பூஜை செய்யச் சென்றார். பூஜை முடிந்ததும் முத்தப்பன் கால் ரூபாயை வெற்றிலை பாக்கில் வைத்து தட்சிணையாகக் கொடுத்தான்.

சுப்பா சாஸ்திரி அதையும் எடுத்து இடுப்பில் சொருகிக் கொண்டு ''ஐயா! ஐந்து ரூபாய் தட்சிணை கொடுக்க வேண்டியது இந்தப் பூஜைக்கு. கால் ரூபாய் தட்சிணை கொடுப்பது உங்களது அந்தஸ்திற்கு ஏற்றதா?'' என்று கேட்டார்.

முத்தய்யாவும் ''ஐயரே! என் பாட்டனார் முப்பாட்டனார் கடைப்பிடித்து வந்த வழக்கத்தை நான் மாற்ற முடியுமா? அவர்கள் எந்தப் பூஜைக்கும் வெள்ளிக் கால் ரூபாயைத்தான் தட்சிணையாகக் கொடுத்து வந்திருக்கிறார்கள். அப்படித்தான் நானும் உங்களுக்கு வெள்ளிக் கால் ரூபாயை தட்சிணையாகக் கொடுத்தேன்'' என்றான்.

இனி அவனிடம் பேசிப் பயன் இல்லை என எண்ணி சுப்பா சாஸ்திரி அங்கிருந்து தம் வீட்டிற்கு கிளம்பினார். வழியில் சிவஞானத்தைக் கண்ட அவர் தனக்கு முத்தய்யன் மிகக் குறைவான தட்சிணையைக் கொடுத்து ஏமாற்றிய விதத்தைக் கூறித் தன் மனக்குறையை வெளிப்படுத்தினார்.

சிவஞானமும் ''முத்தய்யனுக்கு மளிகைக் கடையில் நல்ல லாபம் என்று கேள்விப்பட்டேனே. அவன் இன்று எல்லா சாமான்களையும் அவனது பாட்டன் முப்பாட்டன் விற்ற விலைக்கா விற்கிறான்? அன்று

—சிவனார் செல்வன்—

பைசாவுக்குக் கிடைக்கும் பொருளின் விலை இன்று ஒரு ரூபாய். சரி. இதற்கு நான் ஒரு வழி சொல்கிறேன். அதன் படிச் செய்யுங்கள்'' என்று கூறி சாஸ் திரிகளின் காதில் ரகசியமாக ஏதோ சொன்னார்.

சாஸ்திரியும் அதுகேட்டு மகிழ்ந்து அன்று மாலை அவர் முத்தய்யாவின் மளிகைக்கடைக்குப் போனார். அங்கு ஒரு படி அரிசி வாங்கிக் கொண்டு முத்தய்யாவிடம் அதன் விலையாக கால் ரூபாயைக் கொடுத்தார். முத் தய்யா ஆச்சரியப்பட்டு இதென்ன என்று கேட்டான். சாஸ்திரியும் ''ஐயா! நீங்கள் உங்கள் தாத்தா, முத்தாத்தா வின் பழக்கத்தைக் கைவிடாதது போல நானும் என் தாத்தா, முத்தாத் தாவின் பழக்கத்தைக் கைவிட வில்லை. அவர்கள் ஒரு படி அரிசிக் குக் கால் ருபாய் கொடுத்தது போல நானும் இப்போது கால் ரூபாய் கொடுத்தேன்'' என்றார்.

அங்கு கூடி இருந்தவர்கள் சாஸ்திரி கூறியதைக் கேட்டு விவகாரம் என்ன என்று அவரிடம் கேட்டார்கள். சாஸ்தி ரியும் முத்தையன் தனக்குக் கொடுத்த தட்சணை பற்றி விவரமாகக் கூறித் தானும் தன் முன்னோர்களின் பழக்கத் தைக் கடைப் பிடித்ததாகக் கூறினார். முத்தய்யா குறைவான தட்சிணை கொடுத்து ஏமாற்றியதால் புரோகிதர் சிவஞானத்தின் அறிவுரை கேட்டே அவ்வாறு செய்திருக்கிறார் என்று ஊகித்து விட்டார்கள். அவர்கள் பல மாகச் சிரிக்கவே முத்தய்யா அவமா னத்தால் தலை குனிந்து கொண்டான்.

இதைப் பாராட்டிப் பலர் சிவ ஞானத்தைப் புகழ்ந்தார்கள். ஆனால்



சிவஞானமோ ''ஏமாற்றும் ஒருவனை ஏமாற்றுவதற்கு அறிவுரை கூறுவது சரியான செயலல்லதான். ஆனால் சாஸ்திரிகளுக்கு ஒரு வழிதான் காட் டினேன். அறிவுரை என்று எதுவும் கூறவில்லை'' என்றார். ஆனால் மக் களோ ''நீங்கள் இதற்கு என்ன பெய ரைச் சொன்னாலும் நீங்கள் சொல் கிறபடி நடந்தால் நல்ல பயன் தரு கிறது'' என்றார்கள். அவரிடம் யோசனை கேட்க வருபவர்களும் வந்து கொண்டேதான் இருந்தார்கள்.

ஒருமுறை மீனாட்சி என்ற விதவை தன் இரு மகள்களுடன் சிவப்பூருக்கு வந்தாள். அவளது கணவன் இறந்த பின் அவளது அண்ணன் தன் வீட்டில் இருக்கச் செய்த போதிலும் அவனது மனைவி மட்டும் ''இதென்ன சத்தி ரமா! கண்டவர்களுக்கெல்லாம் சோறு



பழனியப்பனின் வருமானம் மிகவும் குறைந்து விட்டது.

அதனால் அவன் மீனாட்சியம்மாளுக்குக் கெடுதல் செய்ய நினைத்தான். அவன் தனக்குத் தெரிந்த இருவரை மீனாட்சியம்மாள் வீட்டிற்குச் சாப்பிட அனுப்பினான். அவர்கள் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போதே தாம் மறைத்துக் கொண்டு வந்த பாச்சைகளை எடுத்து சாதத்தில் போட்டு விட்டு ''ஐயோ! இதென்ன சாப்பாட்டில் பாச்சை விழுந்திருக்கிறது. இதை கவனிக்காமல் சமைத்ததோடு நில்லாமல் அந்தச் சாப்பாட்டை எடுத்துப் பரிமாறியும் விட்டாளே! இதைச் சாப்பிட்டால் என்ன ஆகுமோ? இதையெல்லாம் கவனிக்காமல் பணமே குறி என்றா இருப்பது?'' எனக்கூறி எழுந்து போய் விட்டார்கள். அப்போது சாப்பிட்டுக் கொண்டிருந்த சிலரும் சாப்பிடாமல் எழுந்து போய் விட்டார்கள்.

வடித்துக் கொட்ட நானா கிடைத்தேன்'' என்று பொரிந்து கொண்டே இருந்தாள். அந்த சுடு சொல்லைச் சகிக்க முடியாமல் மீனாட்சி தன் ஊரை விட்டு வந்து சிவப்பூருக்கு வந்து ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்துக் கொண்டாள்.

அவள் இட்டிலி தோசைகளைத் தயாரித்து விற்றும் ஒரு சிலருக்கு பகல், இரவு வேளைகளில் சாப்பாடு போட்டும் பணம் சம்பாதிக்கலானாள். இதனால் அவ்வூரில் பலகாரக் கடை நடத்தி வந்த பழனியப்பனின் வியாபாரத்தின் மீது பலத்த அடி விழுந்தது. பழனியப்பனின் கடையில் அதுவரை இட்டிலி, தோசை, சாப்பாடு எனச் சாப்பிட்டு வந்த பலர் மீனாட்சியம்மாளின் வீட்டிற்குப் போய் சாப்பிட ஆரம்பித்து விட்டனர். அதனால்

மறுநாளே பழனியப்பன் மீனாட்சியம்மாளின் உணவுக்கடையைப் பற்றி புரளி கிளப்பினான். சாப்பாட்டில் பல்லி, தேள் விழுந்ததைக் கூட அவள் கவனியாமல் பணமே குறியாக இருக்கிறாளென்று அவன் எல்லோரிடமும் சொல்லலானான். இதைக் கண்டு மீனாட்சி கலங்கிப் போய் சிவஞானத்திடம் சென்று ''நான் நன்றாக கவனித்துத் தான் சமையல் செய்கிறேன். ஆனால் அவற்றில் எப்படி பாச்சை விழுந்தது என்று தான் எனக்குப் புரியவில்லை. நான் என்ன செய்வது என்று தெரியாமல் விழிக்கிறேன். நீங்கள் ஏதாவது வழி சொல்ல முடியுமா?'' என்று கேட்டாள்.

சிவஞானமும் சற்று யோசித்து ''இது உன் அஜாக்கிரதையால் நடந்த தல்ல. ஒருவனுடைய சூழ்ச்சியே. யார் அவன்? தெரியவில்லை! உன்னைப் போல உணவுக் கடை வைத்து நடத்தி வரும் பழனியப்பன்தான். நீ அவனுக் குப் போட்டியாக வியாபாரம் நடத்தி யதால் அவன்தான் ஆத்திரப்பட்டு இப் படி செய்திருப்பான். அவனுடைய வேலைதான் இது. முள்ளை முள்ளால் எடுக்க வேண்டும். இவ்வூரில் கட்டைய்யன் என்ற முரடன் இருக் கிறான். அவனிடம் நீ பணம் வாங்கிக் கொள்ளாமல் கொஞ்ச நாட்கள் உன் வீட்டில் வைத்துக் கொண்டு சாப்பாடு போடு. உன் பிரச்னைக்கு நான் வழி செய்கிறேன். இப்போதே கட்டைய் யனை இங்கே வரவழைக்கிறேன்'' என்றார்.



சிவஞானம் கட்டைய்யன் வந்த தும் அவனிடம் ஏதோ கூறி மீனாட்சி யுடன் அனுப்பி வைத்தார். கட்டைய் யன் இரண்டு மூன்று நாட்கள் வரை அங்கு சாப்பிட வருபவர்களை கவனித்தான். நான்காவது நாள் சாப்பிட வந்த இருவர் தம் சட்டைப் பைகளிலிருந்து இரண்டு கரப்பான் பூச்சிகளை எடுத்துத் தாம் சாப்பிடும் சாப்பாட்டில் போடப் போனார்கள். கட்டைய்யன் 'லபக்'கெனப் பாய்ந்து அவர்களது கைகளைப் பிடித்துக் கொண்டான்.

அவர்களை அவன் எழுப்பி நிறுத்தி ''அடே கூலிக்காரப் பயல்களே! யாரி டம் கைக்கூலி பெற்று இந்த வேலை யைச் செய்ய வந்தீர்கள்? உம்! சொல் லுங்கள். சொல்லாவிட்டால் இதே இடத்தில் உங்கள் கழுத்தை நெருக் கிக் கொன்று விடுவேன்'' என்று பயமுறுத்தினான். உடனே அவர்கள் அதைச் செய்யச் சொன்னவன் பழனி யப்பன் என்று அங்கிருந்த எல்லோர் முன்னிலையிலும் கூறித் தம் குற் றத்தை ஒப்புக் கொண்டார்கள்.

எல்லோரும் பழனியப்பனையும் சிவஞானத்தையும் அங்கு வரவழைத் தார்கள். சிவஞானத்தைக் கண்டதும் பழனியப்பன் அவரது கால்களில் விழுந்து ''நீங்கள் கட்டைய்யனை மீனாட்சியம்மாளுக்கு உதவியாக இருக்கச் சொன்னீர்கள் என்பது எனக் குத் தெரியாமல் போயிற்று. என் வியா பாரம் படுத்துவிட்டதே என்ற ஆத்தி ரத்தில் இப்படிச் செய்து விட்டேன். என்னை எல்லோரும் மன்னித்து விடுங்கள்'' என்று கூறி இரண்டு கை களையும் கூப்பி வணங்கினான்.

சிவஞானமும் ''பழனியப்பா! ஒரு வனுடைய தீச் செயலை மன்னிக்க நாங்கள் யார்? அதெல்லாம் ஆண்டவன் பார்த்துக் கொள்வான். ஒருவனுக்குத் தீங்கு செய்ய நினைப்பவன் உருப்பட மாட்டான். யாருக்கும் நல்லதைச் செய்ய விரும்புவன்தான் சுகமாக வாழ்வான். ஒன்று யோசித்துப் பார். இனிமேல் உன்னால் இந்த ஊரில் தலை காட்டத்தான் முடியுமா?'' என்று கேட்டார்.

பழனியப்பனும் தலைகுனிந்தவாறே ''இனிமேல் நான் தலைகாட்ட முடியாதுதான். இந்த ஊரில் உணவுக் கடை மட்டுமல்ல, வேறு எந்த வேலையும் செய்ய முடியாது. நான் இந்த ஊரிலேயே இருக்க விரும்புகிறேன். இதற்கு எதாவது ஒரு யோசனையைக் கூறுங்கள். அதன்படி நான் நடக்கிறேன்'' என்றான் பணிவுடன்.

சிவஞானமும் ''சரி, நான் முதலில் யோசனை செய்து கட்டைய்யனை இங்கு அனுப்பி வைத்தது மீனாட்சியம்மாளின் மூத்த மகளை அவனுக்கு மணமுடித்து வைக்கும் எண்ணத்தில் தான். அவளது இன்னொரு மகளை நீ உன் மகனுக்குத் திருமணம் செய்து வை. அதனால் நீயும் மீனாட்சியம்மாளும் சேர்ந்தே உணவுக் கடை நடத்தலாம். மீனாட்சியம்மாளின் பிரச்னையும் தீரும். நீயும் இவ்வூரில் மானத்துடன் வாழலாம். என்ன சொல்கிறாய்?'' என்று கேட்டார்.

பழனியப்பனும் ''ஆகா! நீங்கள் சொன்னபடியே நடக்கிறேன். நான் இந்த மீனாட்சியம்மாளின் மகளை என் மருமகளாக ஏற்றுக் கொள்கிறேன்'' என்று கூறினான். சிவஞானமும் ''பேஷ் இனிமேல் இந்த மாதிரி எல்லாம் நடக்க வழி இராது. இனி மீனாட்சியம்மாளின் இரு மகள்களின் திருமணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்வோம்'' என்றார்.

விரைவிலேயே அத்திருமணங்கள் சிவஞானம் கூறியபடியே நடந்தன. கட்டைய்யன், பழனியப்பன், மீனாட்சியம்மாள், அவளது இரு மகள்கள் எல்லோரும் ஒரே குடும்பமாக வாழலானார்கள். சிவஞானத்தின் அறிவுரைகள் ஏமாற்றுபவர்களின் செயல்களுக்கு மாற்றாக இருந்து நல்ல பலன்களையே அளித்தன.





# சரக்கு விலை குறைந்தது!

கரியூர் கணக்குப் பிள்ளையாக கஜபதி தம் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து கணக்குகளை எழுதிக் கொண்டிருந்தார். அப்போது அவரது மனைவி வந்து ''இன்று மாலை நாம் சம்மந்தியின் ஊருக்குப் போக வேண்டுமே. நாளை நம் பெண்ணுக்கு சீமந்தம் ஆயிற்றே. மைசூர்பாகு, லட்டு, ஜாங்கிரி எல்லாம் சீராக வைக்க வேண்டாமா? யாரையாவது அனுப்பி அவற்றை நம்மூர் நாராயணய்யர் பட்சணக்கடையிலிருந்து வாங்கி வரச் சொல்லுங்கள்'' என்றாள். கஜபதியும் ''ஆகட்டும் சொல்கிறேன்'' என்றார்.

அவரது மனைவியும் ''நீங்கள் ஆகட்டும் என்று சொல்லி விட்டுப் பிறகு மறந்து போய் விடுவீர்கள். இது நம் கௌரவப் பிரச்னை. நம் பெண்ணின் சீமந்தத்தின் போது முழுச் சீர் வைத்தால்தான் நமக்கு மதிப்பும் பெருமையும். அதனால் ஒவ்வொரு இனிப்பு வகையிலும் நூற்றியொன்று இரக்க வேண்டும். எனவே அவ்வளவு வாங்கி வரச்சொல்லுங்கள்'' என்றாள்.

அதன்பிறகு கஜபதி தெருவழியே போன ராமனைக் கூப்பிட்டு ஏதோ சொல்லி அனுப்பினார். அதன்பின் அவ்வழியே சென்ற கிருஷ்ணன் கோபாலன், மாதவன், கோவிந்தன் என்பவர்களை எல்லாம் கூப்பிட்டு ஏதோ சொல்லி அனுப்பினார். இதையெல்லாம் கவனித்த அவரது மனைவி ''இவரென்ன இவ்வளவு பேர்களிடம் ஏன் இனிப்புப் பண்டங்களை வாங்கி வரச்சொல்ல வேண்டும்? ஒருவரிடம் சொல்லி இருந்தால் போதுமே. கொண்டு வந்து கொடுத்து விட்டு போயிருப்பாரே'' என எண்ணினாள்.

இரண்டு மணிநேரமாகியும் இனிப்புகள் வராமலிருக்கவே கஜபதியிடம் அவரது மனைவி ''என்ன இது? இவ்வளவு பேர்களிடம் சொன்னீர்களே. ஒருவராவது இன்னும் வாங்கிக் கொண்டு வரவில்லையே. நேரம்

—கி. அருணா—

ஆகிக் கொண்டே போகிறதே. அவை வந்த பின் சரி பார்த்துத் தட்டுகளில் அடுக்கி வைத்து எடுத்துப் போக வேண்டுமே. ஒருவேளை நாராய ணய்யர் கடையில் அவ்வளவு இனிப் புகள் இல்லையோ?'' என்று கேட் டாள். கஜபதியும் ''பொறுத்திரு. எல்லாம் இன்னும் கொஞ்ச நேரத்தில் வந்து விடும். கவலைப்படாதே. அதற் கான ஏற்பாட்டைத்தான் செய்திருக் கிறேன்'' என்றார்.

''அது என்ன ஏற்பாடு? நாராயணய் யர் கடையிலிருந்து லட்டு, மைசூர் பாக், ஜாங்கிரி எல்லாம் வாங்கி வர இவ்வளவு நேரமா? யாரும் அங்கே போய் விட்டு வர அரை மணி நேரம் கூடப் பிடிக்காதே'' என்று கேட்டாள். கஜபதியும் ''அசடே! இன்று நாரா யணய்யர் தம் இனிப்புத் தயாரிப்பு களை கிலோ அறுபது ரூபாயென்று விற்று வருகிறார். நான் அனுப்பிய ஒவ் வொருவரும் அவர் கடைக்குப் போய் ஒவ்வொரு இனிப்புப் பண்டத்தையும் எடுத்துக் கொஞ்சம் ருசி பார்த்துவிட்டு ''பூந்தி சரியாக வேகவில்லை, மைசூர் பாக் கொழ கொழவென்று இருக் கிறது. ஜாங்கிரி நன்றாகப் பொரிந்து ஊறவில்லை. மாவு மாவாக இருக் கிறது என்று குறைகளைச் சொல்லி விட்டு வருவார்கள். நாராயணய்யர் திகைத்துப் போய் தான் செய்த பட் சணங்களெல்லாம் வீணாகி விடுமே என்று எண்ணி கிலோ இருபது ரூபாய்க்கு விற்கத்தயாராகி விடுவார். அப்போது நான் முதலில் அனுப்பிய வர்கள் எல்லாம் மறுபடியும் போவார் கள். அப்போது நாராயணய்யர் அவர் கள் கேட்கும் இனிப்புப் பண்டங் களை கிலோ இருபது ரூபாயென்று விற்று விடுவார். அவர்கள் அவற்றை வாங்கிக் கொண்டு வந்து என்னிடம் கொடுப்பார்கள்'' என்றார்.

இதை அவர் சொல்லி முடிக்கவும் அவர் அனுப்பியவர்களெல்லாம் ஒவ்வொருவராக வந்து லட்டு, மைசூர் பாக், ஜாங்கிரி என்று எல்லா வற்றையும் கஜபதியின் முன் வைத்து ''நீங்கள் சொன்னபடி செய்து விட் டோம். நாராயணய்யரும் விலையைக் குறைத்து கிலோ இருபது ரூபாய் என்று கொடுத்து விட்டார்'' என்றனர். அதைக் கண்டு கஜபதியின் மனைவி தன் கணவரின் கெட்டிக்காரத்தனத் தைக் கண்டு வியந்தாள்!





# மாமன்னர் அசோகர்

## 2

சந்திரகுப்தன் சாணக்கியரின் உதவியால் மௌரிய வம்சத்தை நிறுவி பாடலிபுத்திரத்தைத் தலைநகராகக் கொண்ட மகத நாட்டை நிறுவினான். சந்திரகுப்தனுக்குப் பிறகு அவனது மகன் பிந்துசாரன் மன்னனானான். ஒருநாள் ஒரு ஏழை பிராம்மனர் தன் மகள் சுபத்திராவை அழைத்துக் கொண்டு அவள் மகாராணியாவாள் எனச் சோதிடர்கள் கூறியதாகச் சொல்லி அவளை பிந்துசாரனிடம் ஒப்படைத்து விட்டுச் சென்றார். அப்போது சரியென அவளை ஏற்ற மன்னன் பிறகு அவளை மறந்தே போனான். இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகே அவ்விஷயம் அவனுக்கு நினைவிற்கு வந்தது. அப்போது அவன் சுபத்திராவை மணக்கத் தீர்மானித்தான். பிறகு—

நகர் முழுவதும் மன்னர் சுபத்திராவை மணக்கப் போவதாக அறிவிக்கப்பட்டது. தெருக்கள் தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டன. நகரே புதிய தோற்றம் பெற்றது. அதிர்ஷ்டவசமாய் திருமண நாளன்று சுபத்திராவின் தந்தை பாடலிபுத்திரத்திற்கு வந்தார். தன் மகளின் திருமணம் அன்று நடக்கப்போவது கேட்டு அவர் அரண்மனைக்குச் சென்றார்.

அவரைக்கண்ட அரசாங்க வீரர்கள் அவரை எல்லா மரியாதைகளுடன் அரண்மனைக்குள் அழைத்துச் சென்றார்கள். உள்ளே முறைப்படி வேத மந்திரங்கள் ஒலிக்க எல்லாம் நடந்து கொண்டிருந்தன. குறித்த நல்ல முகூர்த்தத்தில் வாக்களித்தபடி மன்னன் பிந்துசாரன் சுபத்திராவை மணந்து கொண்டான். சுபத்திராவின் தந்தை மகிழ்ச்சி ததும்ப மணமக்களை ஆசீர்வதித்தார். இரண்டு ஆண்டுகளாக ஒரு வேலைக்காரி போல அரண்மனை



யில் இருந்த சுபத்திரா இப்போது தங்க நகைகளையும் பட்டாடைகளையும் அணிந்து ராணியாகி விட்டாள்.

இப்படிப்பட்ட சுக வாழ்வு கிடைத்த அவளுக்கு என்ன குறை இருக்க முடியும்? ஆம், அவளால் சுக மாக இருக்க முடியவில்லை. அதற்குக் காரணம் பிந்துசாரனின் மற்ற மனைவி களான ராணிகளே. அவர்களுக்கு சுபத் திராவின் மீது ஏற்பட்ட பொறமை தான் அதற்குக் காரணம் பணக்கார க்ஷத்திரிய குடும்பத்தில் பிறந்த தங்க ளுக்குச் சமமாக ஒரு ஏழைப் பிராம்ம ணனின் பெண் வந்து விட்டாளே என்று அவர்கள் ஆத்திரப்பட்டார்கள் அதனால் அவர்கள் அவ்வப்போது சுபத்திராவை வார்த்தைகளால் வாட்டி எடுக்கலானார்கள். ''அதோ பார். அந்தப் பிச்சைக்காரனின் மகள் எப்படி கர்வத்தோடு துள்ளுகிறாள்?'' என்று ஒரு ராணி கூற மற்றொரு ராணி ''ஒரு பிராம்மணப் பெண் வெட்கமில்லா மல் நம் அந்தப்புரத்திற்கு வந்து விட்டாள். நாமெல்லாம் எங்கே போவது?'' என்ன கூறலானாள்.

இன்னொரு ராணியோ ''இந்த மினுக்குசுந்தரி எத்தனை நாள் இங்கே இருக்க போகிறாள் என்று பார்க்கத் தானே போகிறோம்!'' என்று கூற மற்ற வர்கள் கேலிச் சிரிப்பு சிரிக்கலானார் கள். இந்த மாதிரி ஊசி குத்துவது போன்ற சொற்களைக் கேட்டு சுபத் திராவின் மனம் வேதனைப்பட்டது. அவள் அதையெல்லாம் மௌனமாகச் சகித்துக் கொண்டாள். தன் கணவனி டம் அவள் அது பற்றிக் கூறிக் குறை பட்டுக் கொள்ளவில்லை.

சுபத்திராவிடம் ஆரம்பத்திலே இரக்கம் காட்டிய கிழப் பணிப்பெண் ஒருநாள் சுபத்திராவைக் தனிமையில் கண்டு ''என்னம்மா! இந்த ராணி களெல்லாம் உன்னை இப்படிக் கேவலப்படுத்துகிறார்களே என்று சற்றும் கவலைப்படாதே. இங்கு இவர்களுக்கு உள்ள அதிகாரம் உனக் கும் இருக்கிறது'' என்று கூறித் தேற்றி வந்தாள். சுபத்திரா அதைக் கேட்டு சிரித்து வந்தாள்.

இப்படியாக ஓராண்டு கழிந்தது. சுபத்திரா ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். அப்போது அவள் அக்குழந்தையைப் பார்த்து ''நீ எனக் குக் கிடைத்ததால் என் சோகம் தீர்ந் தது. அதனால் உனக்கு அசோகன் என்றுதான் பெயர்'' என்று கூறினாள். அப்பெயரே அவனுக்கு நிலைத்து விட்டது.



அசோகன் பிறக்கு முன் மற்ற ராணிகளுக்கு ஐந்து ஆண் குழந்தைகள் பிறந்திருந்தன. அவர்களில் சுசேயன் என்பவன் தான் பெரியவன். சிறு வயதிலிருந்தே அவனை இளவரசன் என்று எல்லோரும் கூறி வந்தார்கள். எல்லோரும் அவனிடம் மிகவும் மரியாதை காட்டி வந்தார்கள். அதனால் அவன் கர்வம் கொண்டான். தன் விருப்பத்திற்கு மாறாக நடப்பவர்களிடம் அவன் கடுமையாக நடந்து கொண்டான். தான் சொல்வதை எதிர்ப்பவர்களை அடிக்கலானான். தான் சொல்வதைப் பணியாளர்கள் செய்யாவிட்டால் எட்டி உதைக்கலானான். பிற்காலத்தில் இவன் மன்னனாவானே எனப் பயந்து எல்லோரும் அவனது அடாத செயல்களைச்சகித்து வந்தனர்.

சுசேயன் அசோகனை விட மூன்று வயது பெரியவன். இருவரும் வாலிபர்களாக இருக்கையில் ஒருநாள் அரண்மனைப் பூங்காவில் உலாவிக் கொண்டிருந்தார்கள். அவ்வழியே வந்த தோட்டக்காரன் அசோகனைக் கண்டதும் அவனுக்கு வணக்கம் செலுத்தினான். அப்போது அசோகன் பக்கத்தில் நின்றிருந்த சுசேயன் தோட்டக்காரனை பலமாக அடித்து ''என்னை அவமானப்படுத்துகிறாயா? ஏன் எனக்கு முதலில் வணக்கம் செலுத்தவில்லை?'' என்று கத்தினான். தோட்டக்காரன் ஏதோ பதில் சொல்வதற்குள் அவன் ''இந்த பிச்சைக்காரியின் மகனுக்கா முதல் மரியாதை?'' என்று உறுமினான்.

அதைக் கேட்ட அசோகனுக்குக் கோபம் வந்து விட்டது. தோட்டக்காரன் தனக்கு முதல் மரியாதை தரவில்லை என்பதற்காக மட்டும் சுசேயன் கோபித்துக் கொண்டால் அதில் ஓரளவு அர்த்தம் இருக்கிறது என்று விட்டு விடலாம். ஆனால் தன்னையும் தன் தாயையும் சுசேயன் இழிவுபடுத்திப் பேசியதைத்தான் அசோகனால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை.

அசோகன் உடனே சுசேயனின் கைகளைப் பிடித்துத் திருகியவாறே ''நாம் இருவரும் மன்னரின் புதல்வர்கள். எனவே சம அந்தஸ்து பெற்றவர்கள். இனியும் எப்போதாவது என் தாயாரைப் பற்றிக் கேவலமாகப் பேசினால் நடப்பதே வேறு. இப்போது அப்படிப் பேசியதற்காக மன்னிப்புக் கேள்'' என்றான். சுசேயனோ ''முடியாது. நான் அப்படித்தான் பேசுவேன். உன்னால் முடிந்ததை செய்து கொள்''

என மிடுக்காகக் கூறினான்.

அசோகனும் ''அப்படியா? நானும் இப்படித்தான் உன் கையைத் திருகிக் கொண்டே இருப்பேன்'' என்று மேலும் இறுக்கி சுசேயனின் கைகளை முறுக்கலானான். சுசேயன் வலி பொறுக்க முடியாமல் 'விட்டு விடு' என்று கத்தினான். ஆனால் அசோகன் தன் பிடிப்பைச் சற்றும் தளர்த்தாமல் ''நீ மன்னிப்புக் கேட்டாலே விடுவேன்'' என்றான். இச்சமயம் அங்கே பிந்துசாரனின் அமைச்சர் வந்தார். அந்த நிலையில் இரு அரசகுமாரர்களைக் கண்டு அசோகனிடம் ''உன் அண்ணனை விட்டுவிடு. சகோதரர்களுக்குள் சண்டை கூடாது'' என்றார்.

அதற்கு அசோகன் ''இவன் அண்ணன் மாதிரியா நடந்து கொண்டான்? என் தாய் தந்தையரை அவமதித்தான். இப்போது நீங்கள் சொல்வதால் விட்டு விடுகிறேன். இன்னொரு முறை இவன் இப்படிப் பேசினால் இவனது உடலின் எலும்புகளை நொறுக்கி விடுவேன்'' என்றான் கோபமாக.

அசோகன் சுசேயனின் கைகளை விட்டதும் அவன் அசோகனை முறைத்துப் பார்த்துவிட்டு அங்கிருந்து சென்றான். அமைச்சரும் இது எந்த விபரீதத்தில் முடியுமோ என்று எண்ணிக் கொண்டே அங்கிருந்து சென்றார்.

சந்திரகுப்த மௌரியனுக்கு ஆலோசகராக இருந்த சாணக்கியர் பிந்துசாரனுக்கும் பிரதான ஆலோசகராக இருந்தார். அவர் அசோகனுக்கும் சுசேயனுக்குமிடையே ஏற்படும் மோதல்களை அமைச்சர் வாயிலாகக் கேட்ட பின் ''இப்போது இது அரசகுமாரர்களிடையே சண்டை ஏற்பட்டுள்ளது. மற்ற அரசகுமாரர்களும் இவர்களும் சண்டைச்சச்சரவு இல்லாமல் நாட்டை ஆண்டு வரத் தம்முள் ஒருவனை அனுமதிப்பார்களா? சாதாரண விஷயத்





திற்கே இப்போது சண்டை போடு கிறார்களே'' என்று கவலைப்பட்டு மகத நாட்டின் ஸ்திரத் தன்மை பற்றி யோசிக்கலானார்.

அவர் அமைச்சரிடம் ''எல்லோ ரும் இந்த சுசேயனுக்கு அளவுக்கு மீறிய மரியாதை காட்டுவதால்தான் அவன் தலைகால் புரியாமல் துள்ளு கிறான். அசோகனும் இளைஞனே. அவன் நல்லவனாகவும் ஆகலாம், கெட்டவனாகவும் ஆகலாம். எல்லாம் அப்போதைய சூழ்நிலையைப் பொறுத்தே இருக்கும்'' என்றார். அமைச்சரும் ''ஆம். சுசேயனுக்கு அளவு கடந்த மரியாதை கொடுப்ப தால் அவன் கொடூரமாக நடக்கிறான். அவனிடம் நாடு போய் விட்டால் என்ன ஆகுமோ?'' என்றார்.

சாணக்கியரும் சற்று யோசித்து ''மன்னனிடம் இதை எடுத்துக் கூறி இப்போதே இதற்கு ஒரு வழி செய் கிறேன்'' எனக்கூறினார். அமைச்சரும் வணங்கி விட்டு சாணக்கியரிடம் விடைபெற்றுக் கொண்டு சென்றார். அன்று மாலையே மன்னன் அரண் மனையின் மேல் தளத்தில் உலாவிக் கொண்டிருக்கையில் சாணக்கியர் அவ னைக் காண அங்கு சென்றார்.

சாணக்கியரைக் கண்டதும் பிந்து சாரன் அவரை வணங்கி ''நீங்கள் ஏன் சிரமப்பட்டு இங்கு வர வேண்டும்? சொல்லி அனுப்பி இருந்தால் நானே வந்திருப்பேனே'' என்றான். சாணக்கி யரும் ''உன் புதல்வர்களில் ஒரு வனைத் தேர்ந்தெடுத்து மகத மன்ன னாகத் தக்க பயிற்சி அளிக்க வேண்டிய வேளை வந்து விட்டது. அதைக் கூறு வது என் கடமை என நினைத்தே இங்கு வந்தேன்'' என்றார்.

அது கேட்டு பிந்துசாரன் திடுக் கிட்டு ''எல்லோரிலும் மூத்தவன் என் மகன் சுசேயன் இதற்கு ஏற்ற வனில்லையா?'' என்று கேட்டான். சாணக்கியரும் ''மூத்த மகனுக்குத் தான் முதல் உரிமை என்பது பொது வான விதி. அது எல்லா சந்தர்ப்பங் களுக்கும் பொருந்தாது. தகுதியுள்ள வனுக்கே அரியாசனத்தை அளிக்க வேண்டும். அதுவே நாட்டிற்கு நல் லது'' என்றார். சாணக்கியர் அதிகமா கப் பேசுபவரல்ல என்றும் அவர் எதைக் கூறினாலும் ஒரு காரணத் தோடுதான் கூறுவார் என்றும் பிந்து சாரன் நன்கு அறிந்தவன். சுசேயனுக்கு நாட்டைக் கொடுப்பதைப் பற்றி நன்கு யோசிக்குமாறு அவர் கூறுகிறார் என்று அவன் புரிந்து கொண்டான்.

பிந்துசாரனும் ''அப்படியானால் எல்லோரிலும் மூத்தவனான சுசேயனுக்கு நாட்டைக் கொடுக்க வேண்டாம் என்று கூறுகிறீர்களா? அவனுக்கு நாடு இல்லை என்றால் வேறு யாருக்கு நாட்டைக் கொடுப்பது?'' என்று கேட்டான்.

சாணக்கியரும் ''மன்னா! இவ்விஷயமாய் இப்போது அவசரப்பட்டு நாம் ஒரு முடிவுக்கு வர வேண்டாம். சிம்மாசனத்தை எந்த அரசகுமாரனுக்குக் கொடுப்பது என்பது இன்னும் தீர்மானிக்கப்படவில்லை என்றும் அதற்காக அவர்கள் பரீட்சிக்கப்பட்டு வருகிறார்கள் என்றும் அரசகுமாரர்களுக்குத் தெரிய வேண்டும். எல்லோருக்கும் மூத்தவனாகத்தான் இருப்பதால் நாடு தனக்குத்தான் என்று சுசேயன் என்னாத படி செய்தாக வேண்டும். நாட்டை அடைய தகுதியுள்ளவனே மன்னனாக முடியும் என்பதை அரசகுமாரர்களுக்குத் தெளிவுபடுத்தி விட வேண்டும்'' என்று கூறினார்.

பிந்துசாரனும் ''நீங்கள் கூறியபடியே செய்கிறேன். எதாவது பரீட்சை அவர்களுக்கு வைக்க வேண்டுமா?'' என்று கேட்டான். சாணக்கியரும் ''ஆம். நாளை உன் ஆறு புதல்வர்களையும் ஊர் எல்லையிலுள்ள சிவன் கோவிலுக்கு சூரியோதயம் ஆகும் போது வரச் சொல். அவர்கள் அங்கு வரும்போது மிகச் சிறந்த வாகனங்களில் வரச் சொல். வருமுன் சத்தான உணவை உண்டு விட்டும் வரச் சொல். கோவிலுக்கு வந்து அவர்கள் விலை மதிப்புற்ற ஆசனங்களில் அமர வேண்டும். இவற்றை ஒவ்வொருவருக்கும் தனித் தனியாகத் தெரிவி'' எனக் கூறி



விட்டு அங்கிருந்து சென்றார். சாணக்கியர் கூறியபடியே பிந்துசாரன் தன் மகன்களுக்குத் தெரிவித்தான்.

மறுநாள் சூரியோதயத்திற்கு முன் பிந்துசாரனும் சாணக்கியரும் சிவன் கோவிலில் இருந்தார்கள். சில அமைச்சர்களும் அதிகாரிகளும் அவர்களோடு இருந்தார்கள். குறித்த வேளையில் ஆறு அரசகுமாரர்களும் வந்தனர். சுசேயன் இரட்டை குதிரைகள் பூட்டிய ரதத்தில் வந்தான். இன்னொருவன் அலங்கரிக்கப்பட்ட யானை மீது வந்தான். மூன்றாவது ராஜகுமாரன் உயர் ரகக் குதிரை மீதேறி வந்தான். நான்காவது, ஐந்தாவது அரசகுமாரர்கள் பல்லக்குகளில் வந்தார்கள். கடைசியாக வந்த அசோகன் மட்டும் நடந்தே வந்து குறித்த நேரத்துள் கோவிலுக்கு வந்து சேர்ந்தான்.

ஐந்து அரசகுமாரர்களும் தாம் கொண்டு வந்த தங்க நாற்காலிகளைப் போட்டுக்கொண்டு அவற்றில் அமர்ந்தார்கள். அசோகனோ கட்டாந்தரை மீது அமர்ந்தான். அசோகனைப் பார்த்து மற்ற அரசகுமாரர்கள் கேலியாகச்சிரித்தார்கள். மன்னனுக்குக்கூட அசோகனின் செயல் வேடிக்கையாகத் தோன்றியது.

சாணக்கியர் அரசகுமாரர்களை அணுகி ''நீங்கள் ஏறி வந்த வாகனங்களையும் அமர்ந்திருக்கும் ஆசனங்களையும் பார்த்தோம். சரி, காலையில் என்ன சாப்பிட்டீர்கள்?'' என்று கேட்டார். ஐந்து அரசகுமாரர்களும் தாம் உண்ட பலவித பலகாரங்களைக் கூறினார்கள். அப்போது சாணக்கியர் அசோகனை அணுகி ''நீயும் ராஜகுமாரன்தானே! நீ ஏன் ஒரு நல்ல வாகனத்தில் வராமல் நடந்து வந்தாய்?'' என்று கேட்டார்.

அசோகனும் ''ஐயா! என்னைச் சிறந்த வாகனத்தில் வரச் சொன்னார்கள். நான் என் கால்களையே சிறந்த வாகனமாகக் கருதியதால் நடந்து வந்தேன்'' என்றான். சாணக்கியரும் ''சரி. காலையில் என்ன சாப்பிட்டாய்?'' என்று கேட்கவே அவனும் ''ஒரு கிண்ணித் தயிர். சத்தான உணவைச்சாப்பிட்டு வரவேண்டும் என்றீர்கள். எந்த வேளையில் எதை உண்ண கொடுத்தால் உடல் வளரும் என என் தாயாருக்கு தெரியும். அவள் காலையில் கொடுத்த தயிரைக் அதைக் குடித்து விட்டு வந்தேன்'' என்றான்.

''ஆமாம். கட்டாந்தரையில் ஏன் உட்கார்ந்திருக்கிறாய்?'' என்று சாணக்கியர் கேட்க அசோகனும் ''விலை மதிப்புள்ள ஆசனத்தில் அமரும் படிச்சொன்னதால் நான் வெறும் தரை மீது அமர்ந்தேன். உலகில் பூமியை விட விலை உயர்ந்தது எதுவும் இல்லையே. அதனால்தான் தரை மீது அமர்ந்தேன்'' என்றான்.

சாணக்கியரும் ''பேஷ். வாகனங்களில் சிறந்தது. என உன் கால்களை நீ நம்பியது உன் தன்னம்பிக்கையை எடுத்துக் காட்டுகிறது. நீ தரையை உயர்வாக நினைப்பது நாட்டின் மீது நீ கொண்டுள்ள பற்றைக் காட்டுகிறது எளிய உணவானாலும் சத்துள்ளது எது என அறிந்திருக்கிறாய். உன்னைப் பாராட்டுகிறேன்'' எனக் கூறி அசோகனின் முதுகில் தட்டிக் கொடுத்தார்.






# கண்கட்டி வித்தை!

தன் முயற்சியில் சற்றும் மனத் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் அவன் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! நீ இந்த பயங்கர நடுநிசியில் இப்படிப்பட்ட வேலையை ஏன் செய்ய வேண்டும்? ஒரு நாட்டு மன்னன் ஒரு சேவகனைப் போல கஷ்டப்படுவதா? நீ ஏதாவது மந்திர தந்திரங்களைக் கற்று அவற்றைக் கொண்டு உன் விருப்பம் எதையாவது நிறைவேற்றிக் கொள்ளப் பார்க்கிறாயா? இப்படி மாய மந்திரங்களில் கிடைப்பதெல்லாம் நிலைத்து இருக்காது. ஒரு சிறிது காலத்திற்கு அவற்றால் சந்தோஷம் கிடைக்கலாம். ஆனால் கடைசி வரை நிலைக்காது. இதை விளக்க விகாரமாய் பிறந்த அரச குமாரி அற்புத சக்தி பெற்றும் அதை

## வேதாளம் சொல்லும் கதை



உதறித் தள்ளிய கதையைக் கூறு கிறேன் கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

மாணிக்கபுரியை மாதவவர்மன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனும் அவனது மனைவி சுமித்திராவும் மிகவும் அழகானவர்களே. ஆனால் அவர்களுக்கு வெகு நாட்களுக்குப் பின் பிறந்த பெண் குழந்தை மிகவும் விகாரமாக இருந்தது. தன் மகள் இப்படி விகாரமாக இருக்கிறாளே என்று பெற்றோர்கள் கவலைப்பட்டாலும் அவளை அருமை பெருமையாக வளர்த்து வந்தார்கள்.

அரசகுமாரி அம்பிகா விகாரமாக இருந்தாலும் ஆண்டவன் அவளுக்கு இசைஞானத்தை ஏராளமாக அளித்திருந்தான். உலகில் மனிதனிடம் ஒரு குறை இருந்தாலும் அதற்குள் ஈடு செய்வது போல வேறு ஏதாவது ஒரு சக்தியை ஆண்டவன் அளிக்கத்தான் செய்கிறான். வாய்ப் பாட்டிலும் வீணை வாசிப்பதிலும் அவளுக்கு இணை யாருமே இல்லைதான். அவளது இசையைக் கேட்ட யாரும் மெய் மறந்து போய் விடுவார்கள்.

அம்பிகா வளர்ந்து மணமாகும் வயதை அடைந்து விட்டாள். அதனால் தன் மகளின் திருமணம் பற்றிய கவலை மன்னனுக்கு வந்து விட்டது. இப்படி இருக்கையில் ஒரு பௌர்ணமி இரவில் அம்பிகா தனியாக ஒரு மரத்தடியே அமர்ந்து வீணை வாசித்துக் கொண்டிருந்தாள். அச்சமயத்தில் ஆகாயத்தில் சந்திரமுகி என்ற கந்தர்வப் பெண் அவ்வழியே சென்று கொண்டிருந்தாள். அவள் அம்பிகாவின் வீணை வாசிப்பையும் அதனோடு இழைந்த அவளது இனிய குரலையும் கேட்டு கீழே இறங்கி அம்பிகா இருந்த இடத்தில் போய் நின்றாள்.

அவள் அம்பிகாவைப் பார்த்து ''பேஷ் பேஷ். இந்த மாதிரி கர்ணாமிருத இசையை நான் வேறு எந்த உலகிலும் கேட்டதே இல்லை. உனக்கு எனது வாழ்த்துக்கள்'' என்று கூறினாள். திடுதிப்பென ஒரு பேரழகி தன் முன் வந்து தன்னைப் பாராட்டுவது கண்டு அம்பிகா திகைத்துப் போனாள். அவள் அந்த கந்தர்வ கன்னிகையைக் கண் கொட்டாமல் பார்த்தாள்.

அதைக் கண்ட சந்திரமுகி அவள் எண்ணியதைத் தெரிந்து கொண்டு தன் வலது கையிலிருந்த மோதிரத்தை எடுத்து அவள் விரலில் போட்டு ''இள

வரசியே! இது மந்திர சக்தி வாய்ந்த மோதிரம். இதை அணிந்து கொண்டவர்கள் பிறர் கண்களுக்கு என்னைப் போலத் தென்படுவார்கள். எனவே இனி நீ விகாரமாக இருப்பதாக எண்ணிக் கவலைப்பட வேண்டாம். ஆனால் ஒரு விஷயம். நீ மட்டும் உன் உருவத்தை கண்ணாடியில் பார்த்தால் இப்போது இருப்பது போல விகாரமாகத்தான் தோன்றுவாய். இன்னொரு விஷயம் நீ இந்த மோதிரத்தை அணிந்து கொண்டு எந்தக் கோவிலுக்கும் போக கூடாது. மீறிப் போனால் இதற்குள்ள சக்தி போய் விடும்'' எனக் கூறி விட்டு மாயமாய் மறைந்து போனாள்.



நடந்ததெல்லாம் உண்மைதானா என பிரமித்து அம்பிகா நிற்கையில் அவளது தந்தையும், தாயும் அங்கே வந்தார்கள். அவர்கள் அங்கே ஒரு அழகிய பெண்ணை பார்த்து ஆச்சரியப்பட்டார்கள். அவர்கள் அங்கே தன் பெண்ணின் வீணையைப் பார்த்து விட்டு ''நீ யாரம்மா? என் மகள் வீணை மட்டும் இங்கே இருக்கிறது. ஆனால் அம்பிகாவைக் காணோமே. எங்கே போனாள்?'' என்ற கேட்டார்கள்.

அப்போது அம்பிகா அப்பா என்று கூப்பிடவே மன்னனும் தன் மகளின் குரலைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். அவனுக்கு முன் பார்த்த அழகிதான் தென்பட்டாள். அம்பிகாவைக் காணவில்லை. அப்போது அம்பிகா ''நான்தான் அம்பிகா. உங்கள் கண்களுக்கு அழகிய பெண்ணாகத் தோன்றக் காரணம் கந்தர்வ கன்னிகை கொடுத்த இந்த மந்திரசக்தி வாய்ந்த மோதிரம்தான்'' என்று கூறி நடந்ததை எல்லாம் விவரமாகச் சொன்னாள். அரசி அதைக் கேட்டு அம்பிகா அணிந்திருந்த மோதிரத்தைக் கழற்றிதான் அணிந்து கொண்டாள். மறு விநாடியே அவள் கந்தர்வக் கன்னிகை போல அழகாகத் தென்பட்டாள்.

மன்னனும் அம்பிகாவும் கை தட்டிப் பலமாகச் சிரித்தார்கள். ஒரு விதமாய் தன் மகளின் பிரச்னை தீர்ந்ததே என்று மன்னனும் அரசியும் மகிழ்ந்தார்கள். அரசியும் தன் கையிலிருந்த மோதிரத்தைக் கழற்றி அம்பிகாவின் கை விரலில் போட்டாள்.

மறுநாள் கந்தர்வப் பெண் சந்திரமுகி போல இருந்த இளவரசி அம்பிகாவைப் பார்த்து அவளது தோழிகள் ஆச்சரியப்பட்டார்கள். அவர்கள் தமக்குள் ''இந்தப் பேரழகி மன்னரின் உற



வினளாக இருக்க வேண்டும். பெண் என்றால் இப்படித்தான் இருக்க வேண் டும். நம் இளவரசியும் இருக்கிறாளே! இவளது கால் தூசிக்குக் கூட அவள் சமமாக மாட்டாள்'' என்று கூறி நின்றார்கள்.

அம்பிகாவும் தன் தோழிகள் நினைத்ததை ஊகித்தவளாய் ஒரு பெருமூச்சுவிட்டவாறே ''என்ன மல் லிகா! வசந்தா!! ஏன் என்னை இப்படிக் கூர்ந்து பார்க்கிறீர்கள்? என்ன புதுமை கண்டீர்கள்?'' என்று கேட்டார்கள். இளவரசியின் குரலை அடையாளம் கண்டு கொண்ட அவர்கள் இருவரும் அம்பிகாவை அணுகி ''இளவரசி யாரே! எங்களை மன்னியுங்கள். எந்த மகரிஷியின் வரத்தாலோ தாங்கள் தேவ கன்னிகையின் அழகிய உரு வைப் பெற்றிருக்கிறீர்கள்! உங்கள் தோற்றமே முற்றிலும் மாறிவிட்டதே. முன் போல இல்லவே இல்லையே. எவ்வளவு அழகாக இருக்கிறீர்கள்! எங்கள் கண்களையே நம்ப முடியவில்லையே. உங்கள் குரலைக் கொண்டுதான் எங்கள் முண் நீங்கள் இருப்பதாகத்தெரிந்து கொண்டோம். இது எங்களுக்கு ஆச்சரியமே!'' என்றார்கள்.

ஆனால் இப்போது இளவரசியின் முன் புதிய பிரச்னை ஒன்று தோன்றி விட்டது. எல்லோருக்கும் தான் பேரழகியாகத் தோன்றினாலும் தன் கண்களுக்கு மட்டும் விகாரமாகத் தோன்றுவது அவள் மனதை உறுத்தி யது. நிலைக்கண்ணாடி முன் நிற்கும் போதெல்லாம் அவளுக்கு அருவ ருப்பே ஏற்பட்டது!

இப்படி இருக்கையில் அவளது பிறந்த நாள் வந்தது. வழக்கம் போல மன்னன் பல வேடிக்கைகளைக் காட்ட ஏற்பாடு செய்தான். அவை நடந்தன. கடைசியாக ஒரு மாயாஜால வித்தைக்காரன் தன் இளம் வயது மகளுடன் வித்தைகளைக் காட்டலா னான். அவன் ஒரு மாங்கொட்டையை வைத்து அதன்மீது ஒரு கூடையைக் கவிழ்த்தான். தன் கையிலிருந்த மந்தி ரக் கோலால் அவன் அந்தக் கூடை யைத் தட்டி எடுக்கவே அங்கு ஒரு மாஞ்செடியும் அதன் கிளையில் ஒரு மாதுளம் பழமும் இருந்தன!

அதைக் கண்டு எல்லோரும் 'பிர மாதம்' எனக்கூறிக் கைதட்டினார்கள். அப்போது வித்தைக்காரன் மாதுளம் பழத்தைப் பறித்து அதை அறுத்து அதன் முத்துக்களை உதிர்த்து அங் குள்ளோருக்குச் சாப்பிடக் கொடுத்

தான். அவர்கள் அதைச் சாப்பிட்டு விட்டு மாதுளம் பழம் கொய்யாப் பழத்தின் ருசியில் உள்ளதே! என்று கூறிஅதிசயப்பட்டார்கள். மன்னனும் இளவரசிஅம்பிகாவும்அதைக்கண்டு ஆச்சரியப்பட்டார்கள்.

அப்போது அவன் இன்னொரு வித்தையாகத் தன் மகளைக் காட்டி ''அரசே! இவள் என் மகள். என் கண்களுக்கு இவள் நாககன்னிகை போலத் தென்படுகிறாள். இவளை மணக்க வந்தவர்களெல்லாம் விகாரமாக இருக்கிறாளென்று கூறி ஓடி விடுகிறார்கள். ஆனால் இப்போது நீங்களே இவள் எவ்வளவு அழகானவள் என்று பாருங்கள்'' என்று கூறி தன் கையிலிருந்த மந்திரக் கோலால் அப் பெண்ணின் தலைமீது ஒரு தட்டு தட்டினான்.

மறுநிமிடம் அந்தப் பெண் பளபளக்கும் பல நகைகளை அணிந்து பட்டாடைகளுடனும் தலை மீது பாம்பின்வடிவிலுள்ளதங்கக்கிரீடம் அணிந்தவளாக எல்லோருக்கும் தென்பட்டாள். எல்லோரும் கைதட்டி ஆகா என்று ஆச்சரியத்துடன் கூவினார்கள்.

அப்போது வித்தைக்காரன் பணிவுடன் எல்லோரையும் வணங்கி விட்டு மந்திரக் கோலால் அந்தப் பெண்ணைத் தொட்டான். அவள் மறு விநாடியே முன் போல சாதாரணப் பெண்ணாக ஆகிவிட்டாள். அப் போது அவன் ''சபையோருக்கு ஒரு விண்ணப்பம் என் மகள் இப்போது இருப்பது போலத்தான் எப்போதும் இருப்பாள். இதுவரை நான் செய்த தெல்லாம் கண்கட்டி வித்தையே'' என்று கூறினான்.

மன்னன் அந்த வித்தைக்காரனைப் பாராட்டி ஆயிரம் வராகன்கள் பரிசாக அளித்தான். மேடை மீதமர்ந்து அந்த மாயா ஜாலவித்தைகளைப் பார்த்துக் கொண்டிருந்த இளவரசியின் மனதில் எண்ணங்கள் கொந்தளிக்கலாயின.



அவள் ஒரு முடிவுக்கு வந்தாள். அவள் எழுந்து சென்று வித்தைக்காரனை அணுகி தன்னிடமிருந்த மந்திரசக்தி வாய்ந்த மோதிரத்தைக் கழற்றி அவனிடம் கொடுத்து "இது உனக்கு என் பிறந்தநாள் பரிசு. இதில் உன் மாயா ஜால மந்திரசக்தியைப் போல கந்தர்வ மாயா சக்தி உள்ளது. பரீட்சித்துப் பார்த்துக் கொள்" என்று கூறி அந்தப்புரத்திற்குச் சென்று விட்டாள்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி "மன்னனே! விகாரமாகப் பிறந்த அம்பிகாவிற்கு கந்தர்வ கன்னிகை கொடுத்த மோதிரம் ஒரு வரப் பிரசாதம் அல்லவா? அதைக் கொண்டு நல்லதொரு அரசகுமாரனை மணக்கலாமே. அதை ஒரு வித்தை காட்டிக்குப் பரிசாக அளித்தது பைத்தியகாரத் தனம் தானே? அவள் திடீரென வாழ்க்கை மீது விரக்தி அடைந்து விட்டாளா? இச்சந்தேகங்களுக்கு பதில் தெரிந்தும் நீ கூறா விட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்" என்றது.

விக்கிரமனும் "கந்தர்வ கன்னிகை கொடுத்த மந்திர மோதிரத்தின் சக்தி வரையறுக்கப்பட்டது. தனக்குக் கிடைக்கும் உருவம் இரவல் என்றும் தனதல்ல என்றும் தன்மானமுள்ள அம்பிகா எண்ணினாள். மேலும் அந்த மோதிரத்தை அணிந்து கொண்டு அவள் எந்தக் கோவிலுக்கும் போக முடியாது. மேலும் அவள் நிலையும் மாயாஜாலவித்தைகாட்டிய வித்தைக் காரனின் மகளின் நிலையும் ஒன்றுதான். உண்மை வாழ்க்கையில் அந்தப் பெண் நாக கன்னிகை அல்ல. தன் வித்தையால் வித்தைக்காரன் அவளை ஒரு நாக கன்னிகை போலக் காட்டினான். அது போல மந்திர மோதிரம் இளவரசியை அப்சர கன்னிகை போலக் காட்டியது. உண்மையில் அவள் விகாரமானவளே. எனவே தனக்கில்லாத உருவை இரவல் வாங்கிக் கொண்டு அவள் சுகமாக வாழ விரும்பவும் இல்லை. எனவேதான் அதைப் பரிசாக வித்தைக்காரனுக்குக் கொடுத்து விட்டாள். இது அறிவு பூர்வமான செயலே" என்றான்.

விக்கிரமனின் இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# உண்மையான மகன்!

ஒரு கிராம எல்லையில் ஒரு குடிசை போட்டுக் கொண்டு ஒரு கிழவி வாழ்ந்து வந்தாள். அவள் சற்று தூரத்திலிருந்த காட்டிற்குப் போய் புரசை இலைகளையும் ஈர்க்குச்சி களையும் எடுத்து வந்து இலைகளைத் தைத்தும் துடப்பங்கள் கட்டியும் அவற்றை விற்றுத் தன் மகன் வேலு வைக் காப்பாற்றி வந்தாள்.

வேலு ஒரு வேலையும் செய்யாமல் சோம்பேறியாக இருந்தும் தன் தாயா ரைத் துன்புறுத்திப் பணம் பிடிங்கிக் கொண்டும் போகலானான். இதனால் வெறுப்புற்று கிழவி ''வேலு, நீ இப்படி வேலை வெட்டி இல்லாமல் ஊர் சுற்றிக் கொண்டிருந்தால் நீ உருப் பட மாட்டாய். இனிமேல் நீ வேலை எதாவது செய்தாலே உனக்கு இந்த வீட்டில் இடம். இல்லாவிட்டால் உன்னை வீட்டை விட்டே துரத்தி விடுவேன்'' என்று கூறி அவனை மதிக்காமல் போகவே வேலு வீட்டை விட்டே ஓடிப் போய் விட்டான்.

நாளுக்கு நாள் கிழவி பலஹீன மாகிக்கொண்டே போகலானாள். ஒரு நாள் காட்டில் இலை பறிக்கச் சென்ற போது அவள் தன் நினைவு இழந்து கீழே விழுந்து விட்டாள். அப்போது அங்கு வந்த சோமு என்ற இளைஞன் அவளது மயக்கத்தைப் போக்கி அவ ளைத் தூக்கி நிறுத்தினான். அவளது இலைக் கட்டைச் சுமந்து கொண்டும் அவளுக்குக் கைத் தாங்கல் கொடுத் தும் மெதுவாக நடத்திக் கொண்டு போய் அவளது குடிசையில் கொண்டு போய் விட்டான்.

அப்போது கிழவி மெல்லிய குர லில் ''நீ யாரப்பா?'' என்று கேட்கவே சோமுவும் ''நான் தாய் தந்தையரற்ற அனாதை. எங்காவது யார் வீட்டிலா வது வேலை செய்யலாமென்றுதான் அலைந்து கொண்டிருக்கிறேன் இதுவரை சரியான இடமாக எனக்குக் கிடைக்கவில்லை'' என்றான்.

—எஸ். சோபினி—

கிழவியும் ''உனக்கு நல்ல இடம் கிடைக்கும் வரை என்னோடு இரு'' எனவே அவனும் அதற்குச் சம்மதித்தான். அவன் அக்கிழவியை ஒரு வேலை செய்ய விடாமல் தானே எல்லா வேலைகளையும் செய்து பணம் சம்பாதிக்கலானான். கிழவியும் இலைகளைத் தைத்து விற்று வந்தாள். இருவர் சம்பாதித்த பணத்தில் வீட்டுச் செலவு போக மீதமான பணத்தை அவர்கள் சேமித்தும் வந்தார்கள்.

இந்த நிலையில் வேலு திடீரென கிழவியின் குடிசைக்கு வந்தான். கிழவி நல்ல நிலையில் இருப்பதையும் அவளிடம் பணம் இருப்பதையும் கண்டு ''அம்மா! நான் திருந்தி விட்டேன். இனி உன்னோடு இருந்து உன்னைப் பார்த்துக் கொள்கிறேன், உன் பணத்தையெல்லாம் என்னிடம் கொடுத்து விடு. இங்கு யாரோ ஒருவன் இருக்கிறானே. அவனை விரட்டி விடு'' என்றான்.

கிழவிக்கு வேலுவின் நோக்கம் புரிந்துவிட்டது. அவன் பணத்திற்காக அப்படி நடிக்கிறான் என்பதை அவள் புரிந்து கொண்டு விட்டாள். அதனால் ஒருநாள் வேலுவும் சோமுவும் வீட்டில் இல்லாத சமயம் பார்த்துத்தான் சேமித்து வைத்த பணத்தை ஓரிடத்தில் புதைத்து வைத்தாள். பிறகு குடிசையிலுள்ள பொருள்களைக் கண்டபடி வாரிப் போட்டு விட்டு ''ஐயோ திருடன் வந்து எல்லாப் பணத்தையும் தூக்கிக் கொண்டு போய் விட்டானே'' என்று புலம்பினாள்.

வேலு வந்து விஷயம் தெரிந்து ''ஏய் கிழவி! பணத்தை என்னிடம் கொடுத்திருந்தால் பத்திரமாய் இருந்திருக்குமே. இப்போது உன்னிடம் பணம் இல்லை. நான் இனிமேல் உன்னைப் பார்க்கவே வரமாட்டேன்'' எனக் கூறிவிட்டுப் போய் விட்டான்.

அப்போது வந்த சோமு ''அம்மா! பணம் போனது பற்றிக் கவலைப் பட வேண்டாம். நான் சம்பாதித்துக் காப்பாற்றுகிறேன்'' என்றான். கிழவியும் சிரித்தவாறே ''பணம் எங்கும் போய் விடவில்லை மகனே! வேலு தூக்கிக் கொண்டு போய் விடுவான் என்று நான்தான் ஒளித்து வைத்தேன். பணம் இல்லை என்றதும் ஓடிப் போன அவனா என் மகன்? என்னைக் காப்பாற்றி வரும் நீதான் என் உண்மையான மகன்'' என்றாள்.



# சோழ மண்டலக் கடற்கரை




மன்னர் வளைகுடாவிலிருந்து வடக்கே சோழ மண்டலக் கடற்கரையை அடைகிறோம். இதைப் பற்றி கவிக்குயில் சரோஜினி தேவி தம் கவிதை 'சோழ மண்டலச் செம்படவர்கள்' என அழகான கவிதை புனைந்துள்ளார். இக் கடற்கரையில் பல மதத்தவர்களின் புனிதத் தலங்கள் உள்ளன.


வேளாங்கன்னி மாதா கோவில்

மிக அதிக பக்தர்கள் வழிபடும் வேளாங்கன்னி ஆரோக்கிய மாதாவின் ஆலயம் மத வேறுபாடின்றி பக்தர்கள் வந்து தம் உடலின் அவயவங்களில் வந்த நோயைத் தீர்த்துக் கொண்டு குணமடைந்த அவயவத்தைப் போல தம் சக்திக்கு ஏற்ற அளவில் தங்கத்திலோ அல்லது வெள்ளியிலோ செய்து காணிக்கையாக செலுத்துகிறார்கள். இவ்வாறு செலுத்தப்பட்ட காணிக்கைகளை ஒரு அருங்காட்சியகத்தில் வைத்திருக்கிறார்கள். இக்கோவிலுக்குப் போகும் வழியின் சுவரில் பைபிள் கதைகளைச் சித்திரித்திருக்கிறார்கள்.

வேளாங்கன்னியிலிருந்து சில கிலோ மீட்டர் தொலைவில் நாகப்பட்டினம் உள்ளது. இது பழங் காலத் துறைமுகம். கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் இது பல்லவர்களின் கடற் படைத் தளமாக இருந்தது. இங்கிருந்து உள்ளே தள்ளி 24 கி.மீ. தொலைவில் கர்நாடக இசை மும்மூர்த்திகளான தியாக ராஜர், முத்துசுவாமி தீட்சிதர், சியாமா சாஸ்திரிகள் ஆகியவர்கள் பிறந்த திவாரூர் உள்ளது.

நாகப்பட்டினத்திற்கு 4 கி.மீ வடக்கே நாகூர் உள்ளது.




கர்நாடக இசை மும்மூர்த்திகள்

இங்குள் ஹஜ்ரத் மீராசுல்தான் சையது ஷாஹபுதுல் ஹமீத் அல்லது ஹஜ்ரத் மியானின் புகழ் பெற்ற தர்கா உள்ளது. 400 ஆண்டுகள் பழமையான இதற்கும் மக்கள் மத வேறுபாடின்றி வந்து வழி படுகிறார்கள். தர்காவின் தங்க கோபுரம் ஐந்து சிறு கோபுரங்களில் உள்ளது. தர்காவினுள்ள குளத்து நீர் எல்லா நோய்களையும் போக்குகிறது எனக் கருதப்படுகிறது. நாகூர் பனை ஓலைக் கைவினைப் பொருள்களுக்குப் பெயர் பெற்றது.

இன்னும் சற்று வடக்கே சென்றால் புனிதத் தலமும், பாண்டிச்சேரியின் மாவட்டங்களில் ஒன்றான காரைக்கால் வருகிறது. பல பதிகங்களையும் செய்யுங்களையும் தந்த சிவபக்தை காரைககால் அம்மையார் இங்கு ஆறாவது நூற்றாண்டில் வாழ்ந்தவர். அற்புதத் திருவந்தாதி, இரட்டை மணிமாலை, மூத்த திருப்பதிகங்கள் அவரது படைப்புகளில் சில.

காரைக்கால் அம்மையாருக்கு அற்புத சக்தி இருப்பது கண்டு அவரது கணவர் அவரை விட்டுப் போய் விட்டார். இதனால் வேதனைப்படும் அம்மையார் ஊர் ஊராகக் கோவில்களுக்குச் சென்று பக்திப் பாடல்களைப் பாடி வந்தார். இவருக்கு காரைக்காலில் ஒரு ஆலயம் உள்ளது.



டேனஸ் பர்க் கோட்டை

நாம் அடுத்துச் செல்லும் இடம் தரங்கம்பாடி. ஒரு காலத்தில் டச்சுக்காரர்கள் வசித்த இடம் இது. 1620 லிருந்து 1840 வரை இது அவர்கள் வசம் இருந்த இடம். இந்த ஊர் இன்றும் டச்சுக்காரர்கள் கட்டி விட்டுப் போன நிலையிலேயே உள்ளது. இங்குள்ள டேன்ஸ் பர்க் கோட்டை வாசல் வழியாகத்தான் இவ்வூருக்குள் இன்றும் போய் விட்டு வந்தாக வேண்டும். இங்கு டேனிஷ் கவர்னர் வாழ்ந்த மாளிகையும் அவர்கள் கட்டிய மாதா கோவில்கள் இரண்டும் டச்சுக்காரர்களை நினைவு படுத்துகின்றன.

தரங்கப்பாடிக்கு வடக்கே ஒரு காலத்தில் சோழ காலத்து சிறந்த துறைமுகமான பூம்புகார் உள்ளது. இது மைன்மார், ஸ்ரீலங்கா, மலாசியா, இந்தோசைன, சீனா ஆகிய நாடுகளுடன் வணிகத் தொடர்பு கொண்டிருந்தது. முன்பு கோடையில் இங்கு இந்திர விழா நடை பெற்றதாம். ஒருமுறை அவ்விழா நடக்காது வழிபாடு இல்லாது போனதால் கடல் கோபம் கொண்டு பொங்கி எழுந்து இத்துறைமுக நகரை அழித்து விட்டதாம்.



**பூம்புகாரின் கலையரங்கம்**

பூம்புகார் அருகே 1962ல் நடந்த தொல் பொருள் ஆராய்ச்சியில் பழைய பூம்புகார் நகர் கடலில் மூழ்கி விட்டது எனத் தெரிய வந்துள் ளது. பூம்புகார் புத்த மதகேந்திரமாயும் இருந்தது. ஐம் பெரும் காப்பியங்களில் ஒன்றான மணிமேகலை இதற்குச் சான்று.

பூம்புகாரிலிருந்து நாம் வடக்கே சென்று சிதம்பரத்தை அடைகிறோம். இங்குள்ள ஆலயத் தின் தெய்வம் நடராஜப் பெருமாள் நடனக் கலை யின் அரசர். இங்கு சிவனாருக்கும், பார்வதிக்கும் நடனமாடுவதில் போட்டி நடக்க, நடராஜர ஊர்த்துவ தாண்டவம் ஆடிப் பார்வதியைத் தோற்கடித்தார் எனப் புராணக் கதை கூறுகிறது. அந்த ஊர்த்துவ தாண்டவ சிலையை இன்றும் இக்கோவிலில் காணலாம்.

இக்கோவிலின் நடராஜ விக்கிரகம் ஐந்து உலோகங்களால் வடிவமைக்கப்பட்டது. இக் கோவிலின் மேல்க் கூரை தங்கத் தகட்டால் வேயப்பட்டு தங்கக் கலசங்கள் பொருத்தப்பட்டுள் ளன. இங்கிருந்து கிளம்பி நாம் பாண்டிசேரியை அடைகிறோம்.

பாண்டிச்சேரி மத்திய சர்க்கா ரின் ஆட்சியிலுள்ள பிரதேசம். பழங் காலப் பண்பாட்டுடன் விளங்கும் அழகிய நகரம் இது. இங்கு முதலாவது நூற்றாண்டி லிருந்து இன்று வரை ரோமானி யர், போர்த்துகீசியர், டச்சுக்காரர், பிரெஞ்சுக்காரர், ஆங்கிலேயர் என யாவரும் தம் பண்டக சாலை களை அமைத்து வியாபாரம் செய்தவர்களே. கி.பி. 1914 லிருந்து 1954 வரை பாண்டிச் சேரி பிரெஞ்சுக்காரர்களின் ஆட்சியில் இருந்தது.



**நடராஜப் பெருமான்**

நம் நாட்டின் சுதந்திரம் போராட்டம் நடந்து கொண்டிருந்த போது பாண்டிச்சேரி பல சுதந்திர போராட்ட வீரர்களின் புகலிடமாக இருந்தது. மகாகவி சப்பிரமணிய பாரதியார் இங்கு இருந்து பல நாட்டுப்பற்றுப் பாடல்களையும் இலக்கியப் படைப்புகளையும் தந்து விடுதலைப் போரைத் தொடர்ந்து நடத்திக் கொண்டிருந்தார். தமிழ் இலக்கியத்தில் மறுமலர்ச்சியைக் கொண்டு வந்த இவரது பாஞ்சாலி சபதம், குயில் பாட்டு, கண்ணன் பாட்டு புகழ் பெற்றவை. ஈஸ்வர தர்மராஜன் கோவில் தெருவில் நெ. 20 இலக்கமிட்ட இவரது வீடு தேசிய நினைவு சின்னமாக ஆக்கப்பட்டுள்ளது.



ஸ்ரீ அரவிந்தர்

இங்கு புகலடைந்த மற்றொரு விடுதலைப் வீரர் அரவிந்த கோஷ். அவர் 1920ல் பாண்டிச்சேரிக்கு வந்தார். இங்கு அவர் ஆன்மீகத் துறையில் இறங்கி பல வேதாந்த நூல்களை எழுதினார். லைப் டிவைன், சாவித்திரி, கீதைக்கு உரை, உபநிஷத்துக்கள், வேதங்கள் என சிலவற்றை இவரது படைப்புகளாகக் குறிப்பிடலாம்.

அவர் தம் குறிக்கோள்களை நடைமுறைபடுத்த மதர் மிர்ரா அல்பாசா என்ற பிரெஞ்சு அம்மையாருடன் சேர்ந்து ஒரு ஆசிரமத்தை நிறுவினார். இந்த அம்மையார் அவருக்கு 1920லிருந்து 1950 வரை உறுதுணையாக இருந்து அவர் இறந்தபின் ஆசிரமப் பொறுப்பை ஏற்று அரவிந்தரின் பணிகளைத் தொடர்ந்து நடத்தி 1973ல் உயிர் நீத்தார்.

ஆரோவில் (ஒளி நகரம்) பாண்டிச்சேரியிலிருந்து 6 கி.மீ. தொலைவில் அரவிந்தரின் நினைவில் அமைக்கப்பட்டது. உலகில் யாருடைய கட்டுப்பாட்டின் கீழ் இல்லாமல் எல்லோரும் நல்லெண்ணம் கொண்டு அந்தரங்க சுத்தியுடன் உண்மை நெறியில் வாழ இடம் ஒன்று இருக்க வேண்டுமென அவர் எண்ணியதை செயலாக்க இங்குள்ளவர்கள் முயன்று வருகிறார்கள்.



ஆரோவில்லிலுள்ள மாத்ரு மந்திர்



# கிணற்றுத் தவளை!

அரளியூர் அங்கப்பன் தன் உறவினர்களின் மீது அதிக அன்பு கொண்டவன். அவனது மனைவி அன்னமும் உறவினர்களை உபசரிப்பதில் தன் கணவனுக்குச் சற்றும் சளைத்தவளல்ல. இத்தம்பதிகளைப் போற்றா தவர்களே இல்லை.

அங்கப்பன் பேச்சு வன்மையும் கொண்டவன். அவனோடு பலர் பேசினாலும் பொழுது போவது கூடத் தெரியாது. கல்லூரிலுள்ள கனகசபை என்பவன் பெரும் பணக்காரன். ஆனால் அவன் தன் ஊரைவிட்டு எங்குமே போகாதவன். தன்தாயை விட உயர்ந்தவர் யாருமில்லை என்றும் தன் ஊர் போல உலகில் எங்கும் இல்லை என்றும் அவன் எண்ணி வருபவன். அவனது மனைவி சிவகாமி அழகானவள். புத்திசாலி. நல்லவள். சாதுரியமாக நடப்பவள்.

அவள் மணமாகி வந்த ஒரு மாதத்துள் தன் கணவனின் மனப்பான்மை கண்டு மிகவும் மனமொடிந்து போனாள். தன் கணவன் ஒரு சில விஷயங்களை அறிந்திருந்தாலும் புதிதாக எதையும் தெரிந்து கொள்ள விரும்பவில்லை என அவள் தெரிந்து கொண்டாள். அது மட்டுமல்ல அவன் தன்னைத் தானே புகழ்ந்து கொள்வதும் அவளுக்குப் பிடிக்கவில்லை.

இப்படிப் பிறரை மதியாமலும் தன்னைப் பற்றியே டமாரம் அடித்துக் கொள்ளும் தன் கணவன் அந்த ஊரை விட்டு வேறு ஊர்களுக்குப் போய் வந்தாலே அவன் போக்கு மாறும் என்று சிவகாமி எண்ணினாள். இதற்காக அவள் தன் தூர உறவினரான அங்கப்பனின் ஊரான அரளியூருக்குத் தன் கணவனுடன் செல்லத் தீர்மானித்துக் கொண்டாள்.

''அரளியூர் கல்லூரை விட எவ்வளவோ மடங்கு உயர்ந்தது. அங்கு என் பெரியப்பாவின் மகன் அங்கப்பன் இருக்கிறார். அவருக்குத் தெரிந்த

—பரத் வெங்கட்—



இதைவிட நன்றாகப் பாயசம் வைப்பாள் அதன் ருசியும் மணமும் அலாதி. தெரியுமா?'' என்றான். அங்கப்பனும் ''ஓ! அப்படியானால் ஒருமுறை உங்கள் ஊருக்கு வந்து அந்தப் பாயசத்தையும் ருசி பார்த்தால் போயிற்று'' என்று சிரித்தவாறே கூறினான்.

அன்றிரவு கனகசபைக்குப் படுக்க மெத்தை விரித்து அங்கப்பன் அவனை அதில் படுக்கச் சொன்னான். அப்போது கனகசபை ''எங்கள் ஊர் இலவம் பஞ்சிற்கு இணை வேறு எங்கும் இல்லை. இது கொஞ்சம் கடினமாய் இருக்கிறது'' எனக் கூறிப் படுத்தான். அப்போது சிவகாமி அங்கப்பனைத் தனியே அழைத்துப் போய் ''நீங்கள் தவறாக எண்ணி விடாதீர்கள். இவர் தானே பெரியவர், தன் ஊர் சிறந்தது தன்னுடையதெல்லாம் உயர்ந்தது என்று சொல்லிக் கொண்டே இருப்பார். அவரைத் திருத்தவே நான் அவரை இங்கு அழைத்து வந்தேன். இதுவரை அவர் தன் ஊரைவிட்டு வேறு எந்த ஊருக்கும் போனதே கிடையாது'' என்றாள்.

அங்கப்பனும் ''இதை நீ முன்பே என்னிடம் கூறி இருக்கலாம். பரவாயில்லை. இனி நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்றான். மறுநாள் அவன் கனகசபையிடம் அவ்வூரிலுள்ள தன் உறவினனான கைலாசத்தைப் பற்றிக் கூறினான்.

கைலாசம் தன் மகளுக்குக் கல்யாணம் செய்த போது அங்கப்பன் ஐயாயிரம் ரூபாய் கொடுத்து உதவினான். அவன் வீட்டுக்கூரை இற்றுப் போனபோது அதைப் புதுப்பிக்கப் பனை ஓலைகளைக் கொடுத்தான்.

விஷயங்கள் வேறு யாருக்குமே தெரியாதெனக்கூறுகிறார்கள். அங்கே நாம் போனால் நீங்கள் உயர்ந்தவரா அல்லது அவரா என்பது தெரிந்து விடும்'' என்று சிவகாமி தன் கணவனிடம் கூறினாள். கனகசபையும் ''ஓகோ! அவர் என்னைவிட உயர்ந்தவரா? அவருக்கு எல்லாம் தெரியுமா? என்னை விட அவருக்கு அப்படி என்னதான் அதிகமாகத் தெரியும்? அதைத்தான் பார்ப்போமே'' எனக் கூறித் தன் மனைவியுடன் அரளியூருக்குச் சென்றான்.

அங்கப்பன் கனகசபையையும் சிவகாமியையும் மகிழ்ச்சியுடன் வரவேற்றான். அன்னம் அவர்களுக்குப் பாயசம் வைத்துப் பரிமாறினாள். சிவகாமி அதை வெகுவாகப் புகழ்ந்தாள். ஆனால் கனகசபை ''என் தாயார்

அவன் நோயுற்ற போது அங்கப்பன் தன்னிடமுள்ள மாத்திரைகளைக் கொடுத்து உதவினான். இப்படியெல்லாம் உதவி செய்தும் கைலாசம் அங்கப்பனைப் பற்றி ஒரு நல்ல வார்த்தை கூடக் கூறவில்லை.

இப்படிப்பட்ட கைலாசத்தின் வீட்டிற்குத்தான் அங்கப்பன் கனகசபையைக் கூட்டிக் கொண்டு சென்றான். கைலாசம் கனகசபையிடம் நன்றாகப் பேசினான். ஆனால் அங்கப்பனை லட்சியம் செய்யவில்லை. அங்கப்பன் ஏதாவது கேட்டாலும் இறுமாப்புடன் அலட்சியமாக பதிலளித்தான். அவர்கள் கிளம்பும் போது மட்டும் கைலாசம் அங்கப்பனிடம் ''எனக்கு அவசரமாக ஐம்பது ரூபாய் வேண்டும். உடனே கொடுத்தனுப்பு. தெரிந்ததா?'' என்றான் மிடுக்காக.

அங்கிருந்து வெளியே வந்து கொஞ்ச தூரம் போனதும் கனகசபையிடம் அங்கப்பன் ''இப்படிப்பட்டவர்களை நான் என்ன செய்ய வேண்டும் என்று சொல்லுங்கள்'' என்று கேட்டான். கனகசபை சற்று யோசித்து ''இந்தக் கைலாசத்தைப் பார்த்ததும் எனக்கு எங்கள் ஊர் கணபதியின் நினைவு வந்தது. அவனும் இவனைப் போலத்தான் தனக்கு உதவுபவர்களை லட்சியம் செய்வதில்லை. நான் அவனைக் குறை கூற மாட்டேன். ஏனெனில் அவன் என்னிடம் மரியாதையுடன் நடந்து கொள்கிறான். உங்களுக்குத்தான் மனிதர்களின் தராதரம் தெரியவில்லை என்பேன். மனித இயல்பு எப்படிப்பட்டது என்று என் அம்மா எனக்குச் சிறு வயதிலிருந்தே சொல்லிக் கொடுத்திருக்கிறாள்.



எனவே நான் யாரிடம் எப்படிப் பழக வேண்டுமோ அப்படிப் பழகி என் மரியாதையைக் காப்பாற்றிக் கொள்கிறேன்'' என்றான்.

அங்கப்பனும் ''புரிந்தது உங்கள் வழி. இங்குள்ள மாட்டூரில் புது ரக எரு தயாரிக்கிறார்கள். அந்த எருவைப் போடுவதால் இவ்வூர் மாம்பழம் மிக ருசியாக இருக்கிறது'' என்றான். உடனே கனகசபை ''மாட்டூர் எருவால் மனிதர்களுக்குச் சரும நோய் ஏற்படுகிறது. எங்கள் ஊரில் தயாராகும் எருவால் ருசி கூடுவதோடு மனிதர்களுக்கு எந்த நோயும் வருவதில்லை'' என்றான்.

கனகசபையை அங்கப்பன் ஒரு துணிக் கடைக்கு அழைத்துச் சென்றான். கோவிலுக்கு அழைத்துச் சென்றான். இன்னும் பல அதிசயங்களை

அவனுக்குக் காட்டினான். ஆனால் கனகசபை அவற்றையெல்லாம் அலட்சியமாகவே பார்த்தான். அவனது மனைவி சிவகாமி அவ்வூரின் சிறப்புகளைப் பாராட்டிய போதிலும் கனகசபை தன் ஊர்ப் பெருமையையே கூறி வந்தான்.

இப்படியாக ஒரு வாரம் கழிந்தது. சிவகாமி தன் கணவனுடன் ஊருக்குக் கிளம்பத்தயாரானாள். அவள் அங்கப்பனையும் அவனது மனைவி அன்னத்தையும் வெகுவாகப் புகழ்ந்து ''இந்த ஒருவாரகாலத்தில் நீங்கள் செய்த உபசரிப்புகள் பிரமாதம். இதை மறக்கவே முடியாது. உங்கள் ஊரே அற்புதமாக உள்ளது. இங்கு வந்தது எனக்கு மிகுந்த சந்தோஷத்தையே அளித்துள்ளது'' என்றாள்.

அப்போது அங்கப்பன் சற்று தூரத்தில் நின்ற கனகசபையைச் சுட்டிக் காட்டி ''சரி. இவ்வூரின் சிறப்புகளையெல்லாம் உன் கணவனுக்கு எடுத்துக் கூறு. மறுபடியும் எங்கள் ஊருக்கு வா. அப்போது உன் கணவனை மறக்காமல் உன்னோடு கூட்டிக் கொண்டு வா'' என்றான்.

அதற்கு சிவகாமி ''ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்? இம்முறை அவர் என்னோடு வரவில்லையா? அது போல அடுத்த முறையும் வருவார்'' என்றாள். அங்கப்பன் பலமாகச் சிரித்து ''அவர் என்னைப் பொறுத்த வரை இன்னமும் கல்லூரிலேயேதான் இருக்கிறார். அதை விட்டு இன்னமும் வெளியே வரவில்லை. அவரது பேச்சும் அவரது நடத்தையும் அதையேதான் காட்டுகிறது'' என்றான்.

அப்போது கனகசபை திடுக்கிட்டான். ஆம் அவன் அரளியூருக்கு வந்த போதிலும் எப்போதும் கல்லூரைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்ததால் அவன் கல்லூரில் இருந்தது போலத்தானே ஆயிற்று!

அப்போது முதல் கனகசபை எந்த ஊருக்குச் சென்றாலும் தன் ஊரின் பெருமை பற்றியோ தன்னைப் பற்றியோ தம்பட்டம் அடித்துக் கொள்ளாமல் அந்தந்த ஊர்களின் புதிய அம்சங்களையும் மற்றவர்களைப் பற்றியும் பல புதிய விஷயங்களையும் தெரிந்து கொள்ளலானான். சிவகாமியும் தன் கணவனிடம் ஏற்பட்ட மாறுதல் கண்டு பூரித்துப் போனாள்.



# பொன்மயமான பொழுதுகள் - 10





1 ...இந்தப் பனிபடர்ந்த எரிமலை அந்நாட்டிலுள்ளவர்களுக்கு மிகப் புனிதமானது; இதன் உயரம் 3775 மீ. உலகிலே மிக அதிக எண்ணிக்கையில் இது படம் பிடிக்கப்பட்டுள்ளது. இது எது?

## உலகில் இதை எங்கு காண்பீர்கள்?

2 ...ஷ்வே டாகான்! இது தங்கப் பகோடா எனவும் கூறப்படுகிறது. இது கண்ணைப் பறிக்கும் பௌத்த ஆலயம். இது 8868 மெல்லிய தங்கத் தகடுகளால் மூடப்பட்டுள்ளது.

3 ...பீக்பென்! உலகில் இது மிக அதிசய மணி. சிலர் இதற்கு இப்பெயர் வர இதனை ஆட்டி அடித்தவன் என்கிறார்கள். வேறு சிலர் இது புகழ் பெற்ற குத்துச் சண்டை பயில்வானின் நினைவில் இப்பெயர் வைக்கப்பட்டதாக நினைக்கிறார்கள். இதன் நிறை 13 டன். இது எங்கு உள்ளது?



4 ...நீள வால் மம்மல் அல்லது லேமுர்: சில குரங்கு போலவும் சில எலி அல்லது அணில் போலவும் உள்ளன. எங்கு?



5 ...மனிதன் தோண்டிய மாபெரும் பள்ளம்!

இங்கு 1871ல் வைரம் கண்டுபிடிக்கப்பட்டது. அப்போதிருந்து 1915 வரை வைரச் சுரங்கக்காரர்கள் சுமார் 23 மில்லியன் டன் மண்ணையும் கல்லையும் எடுத்தெறிந்து 2.7 டன் வைரங்களை அடைந்தனர். அவர்கள் தோண்டிய இந்தப் பெரிய பள்ளம் எங்கே உள்ளது?



**கதைப் புதிர்**

*சில சமயம் திறமை மிக்க துப்பறியும் நிபுணர்கள் கூடத் தவறு செய்கிறார்கள். இக்கதையில் ஷெர்லக் ஹோம்ஸ் எங்கு தவறு செய்தார் எனக் கூறுங்கள்.*

# ஹோம்ஸ்! நீங்கள் தவறு செய்தீர்கள்!

கிறிஸ்மஸ் முடிந்த இரண்டாவது நாளில் நான் ஷெர்லக் ஹோம்ஸைக் காணச் சென்றேன். அவர் சோபாவில் பழுப்பு நிற ஆடை அணிந்து அமர்ந்திருந்தார். அவர் பக்கம் புகை பிடிக்கும் பைப்பும், கசங்கிய செய்தித்தாள் களும் இருந்தன. இவை போக ஒரு மர நாற் காலியின் பின் புறம் மிகவும் அழுக்கடைந்து கிழிந்த முரட்டுத் 'பெல்ட் ஹேட்' இருந்தது. ஹோம்ஸ் அதை மாட்டிப் பரீட்சித்துக் கொண்டிருந்தார். ஒரு லென்சும் சிறு இடுக்கியும் வேறு அவரருகே இருந்தன.

''நான் வந்தது இடைஞ்சலா?'' என நான் கேட்டேன். ''இல்லை. என் முடிவுகளை என் நண்பருடன் விவாதிக்க முடிகிறதே என நான் மகிழ்கிறேன். விஷயம் சாதாரணமே. ஆனால் விவாதிக்கத் தக்கது'' என்றார்.

''உங்களுக்குத்தான் கமிஷனர் பேட்டர் சனைத் தெரியுமே. இது அவருடையது''

''அவர் அணியும் 'ஹேட்'டா?''

''இல்லை. அவருக்குக் கிடைத்தது. அதன் சொந் தக்காரர் யாரென்று தெரியாது.''

''அப்படியானால் அவர் யாரென்று கண்டு பிடிக்க உங்களிடம் என்ன தடயம் இருக்கிறது?

''நாம் ஊகிக்கத் தக்கது உள்ளது?

''அவருடைய (ஹேட்) தொப்பியிலிருந்தா?''

''ஆம். சரியாக''

''இந்தத் தொப்பியிலிருந்து என்ன அறிந்தீர்?''

அவர் அதைக் கையில் எடுத்து வைத்துக் கொண்டு உற்றுப் பார்த்தார். ''ஆகா! அந்த மனிதர் மிகவும் கெட்டிக்காரர் என்று தெரிகிறது.''

''ஹோம்ஸ்! நீங்கள் கேலி செய்கிறீர்களா? நான் முட்டாளாகத்தான் இருக்க வேண்டும். ஏனெனில் நீங்கள் சொல்வதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லையே. ஆமாம். அந்த மனிதன் மிகவும் கெட்டிக்காரர் என்று எப்படிக் கண்டு கொண்டீர்கள்?'' என்று ஹோம்ஸிடம் நான் கேட்டேன்.

பதிலுக்கு ஹோம்ஸ் அந்தத் தொப்பியைத் தன் தலையில் வைத்துக் காட்டினார். அது அவரது நெற்றிக்குக் கீழே இறங்கி விட்டது. தொப்பியின் முனை அவரது மூக்கைத் தொட்டது. ஹோம்ஸ் ''ஒருவருக்கு இவ்வளவு பெய பெரிய மூளை இருந்தால் அவர் கெட்டிக்காரர்ராகத் தானே இருப்பார்?'' என்றார்.

***(கானன்டாயிலின் 'தி புளூ கார் பன்கிள்' என்பதிலிருந்து எடுக்கப்பட்டது)***



## படக் கேள்வி

ஒரு சிவப்பு இந்தியன் முதல் ஐரோப்பியர் வந்து கரை இறங்குவதைப் பார்க்கிறான். இந்தப் படத்தில் ஒரு பெரிய தவறு உள்ளது. அது என்ன?

# அயல் நாட்டவர் கரைக்கு வந்த போது...





## படம் புதிர்

1. இந்த படம்

1) பாரட் பிஷ் 2) விஸ்லர் 3) ஆர்ச்சர் பிஷ்

2 இந்த மனிதன் உப்பு நீர் ஏரி ஒன்றில் படுத்து ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருக்கிறான் அந்த உப்பு நீர் நிலை 1) காஸ்பியன் கடல் 2) சாக்கடல் 3) டாரென்ஸ் ஏரி




3) இந்தப் படம் ஒரு நாட்டை காட்டுகிறது. அது 1) ஸ்பெயின் 2) பிரான்ஸ் 3) போர்த்துகல்







## பொன்மயமான பொழுதுகள் நெ 9ன் விடைகள்

**உலகில் எங்கு?**

1) கோலாக்கரடிகள் ஆஸ்திரேலியாவில்தான் உள்ளன.
2) லீட்டில் மெர்மெய்ட் சிலை கோபன்ஹேகன் துறைமுக நுழைவாசலில் உள்ளது.
3) மேடம் டுஸ்ஸாடின் மெழுகு அருங்காட்சியகம் லண்டனில் உள்ளது.
4) ஸ்டேட்ஸில் சான்பிரான்சிஸ் கோவிற்குப் போனால் கோல்டன் கேட் பிரிட்ஜைக் கடக்கலாம்.

**கேள்விக் கணைகள்:**

1. அவர்கள் ஒவ்வொருவருக்கும் சமமாக ரொட்டித்துண்டுகள் கிடைத்ததென்றால் ஒவ்வொரு ரொட்டியும் மூன்று சம துண்டுகளாக ஆக்கப்பட்டன. மொத்தம் 24 துண்டுகளாயின. ஒவ்வொருவரும் எட்டு துண்டுகளைச் சாப்பிட்டனர். ஐந்து ரொட்டிகளை வைத்திருந்தவன் அவற்றை 15 துண்டுகளாக்கி தான் எட்டுத் துண்டுகளைச் சாப்பிட்டு மீதி ஏழு துண்டுகளைப் பயணிக்குக் கொடுத்தான். அதுபோல் 3 ரொட்டிகளை வைத்திருந்தவனின் ரொட்டிகள் 9 துண்டுகளாயின. அவற்றில் அவன் எட்டு துண்டுகளைச் சாப்பிட்டு விட்டு ஒரு துண்டை மட்டும் பயணிக்குக் கொடுத்தான். எனவே 5 ரொட்டிக்காரன் ஏழு வெள்ளி நாணயங்களையும் 3 ரொட்டிக்காரன் ஒரு வெள்ளி நாணயத்தையும் தம் பங்காக எடுத்துக் கொள்ள வேண்டும்.
2. அப்போது மழை பெய்யவில்லை.
3. எல்லோரும் செய்வது போல அவர்கள் அவற்றைத் தூர விட்டெறிவார்கள்.
4. 5 ஸ்டாப்கள்.
5. வெள்ளைக் கைக் குட்டையின் முடி போடப்படாத முனையை சிவப்பு கைக்குட்டையின் முடி போடாத முனையுடன் சேர்த்து முடிபோட வேண்டும்.
6. ஒரு சவுக்கு அதன் நுனி ஒலியை விட வேகமாக சத்தமிடுவதால்.
7. அது தண்ணீரல்லாது வேறு எதோ ஒரு திரவத்தால் நிரப்பப்பட்டிருந்தது.
8. எட்டு நாட்கள் மீதமிருக்கும் போது தண்ணீர் 5வது நாளில் பிரிக்கப்பட்டதால் யாரும் பாதிக்கப்படவில்லை. அதாவது பிரிக்கப்பட்ட நீர் எட்டு லிட்டர் என்றாகிறது. இது இறந்த மனிதனின் பங்கு.
9. பலவந்த் சர்மா தன் இடது கையைத் தூக்கினார். ஆனால் காயப் பட்டதாகக் கூறிய கையை அவர் தூக்கவில்லை.



# மகாபாரதம்

பாண்டவர்களின் நிலை கேட்டு வருந்தி இனி என்ன நடக்குமோ என திருதராஷ்டிரன் பயப்படுவதை சகுனி கவனித்து விட்டான். அதை அவன் கர்ணனிடம் சொல்லி அவனையும் கூட்டிக் கொண்டு துரியோதனனைக் காணச் சென்றான். அவனிடம் சகுனி திருதராஷ்டிரனின் மனநிலையைக் கூறவே துரியோதனன் என்ன செய்வது என்று திகைக்கலானான்.

அது கண்டு கர்ணன் ''நீங்கள் ஏன் திகிலடைகிறீர்கள்? உண்மையில் பயப்பட வேண்டியவர்கள் பாண்டவர்களே. மன்னராக உள்ள உங்களுக்குச்சமமாவார்களா? இப்போது அவர்கள் துவைத வனத்தில் இருக்கிறார்களாம். நாம் அவர்களுக்கு முன் போய் ஆடம்பரமாக இருந்தால் அவர்களுக்கு வயிற்றெரிச்சல் ஏற்படும். அதைக் கண்டு நாம் மகிழலாம்'' என்றான்.

சகுனியும் கர்ணன் கூறுவது போல செய்வதே சரி என்றான். இருவர் சொன்னதைக் கேட்ட துரியோதனன் ''நீங்கள் சொல்வதெல்லாம் சரி. ஆனால் நாம் துவைத வனத்திற்குப் போக என் தந்தையின் அனுமதி பெற வேண்டும். பெரியவர் பீஷ்மரின் இசைவு இருக்க வேண்டும். இதைப் பெற ஏதாவது வழி செய்து விட்டு நாளைக் காலை வந்து என்னிடம் கூறுங்கள்'' என்றான்.

கர்ணனும் ''துவைதவனத்திற்கு நாம் போக வழியா இல்லை? ஆயிரம் வழிகளைக் கண்டு பிடிக்கலாம். இன்றிரவு முழுவதும் யோசித்துப் பார்த்து நாளைக் காலையில் ஒரு சரியான வழியைக் கூறுகிறேன்'' என்று சொல்லி சகுனியை அழைத்துக் கொண்டு சென்றான்.

கர்ணனும் சகுனியும் மறுநாள்

– துரியோதனனின் விடுதலை –




காலை வந்து ஏதாவது வழி சொல்வதாகக் கூறிவிட்டுச் சென்றார்கள். மறுநாள் அவர்கள் துச்சாதனனை அழைத்துக் கொண்டு வந்து துரியோதனனைப் பார்த்தார்கள். கர்ணன் அப்போது ''நாம் துவைத வனத்திலுள்ள பசுக்களைக் காக்கச் செல்கிறோம். இது மன்னர்களின் கடமை. இதைச் சொன்னால் உங்கள் தந்தை அங்கு போக உங்களை அனுமதிப்பார். அப்போது நாம் நினைத்தது நிறைவேறும்'' என்றான்.

மற்றவர்கள் கைதட்டி கர்ணனின் யோசனை மிகச் சிறந்தது எனப் பாராட்டினார்கள். அவர்கள் சமங்கன் என்ற மாட்டுக்காரனைகூப்பிட்டு ''நீ எங்களோடு பெரிய மன்னரைக் காண வா. நம் பசுமாடுகளெல்லாம் துவைத வனத்தில் இருக்கின்றன. அவற்றைக் கொடிய மிருகங்கள் தாக்கிக் கொன்று விடுமோ என பயப்படுகிறோம். அதனால் எங்கள் பசுக்களை நீங்கள் தாம் காப்பாற்ற வேண்டும் என்று சொல்'' என்று சொல்லச் சொன்னார்கள். அவனும் அந்த நால்வருடன் சேர்ந்து போய் திருதராஷ்டிரனைக் கண்டு ''நம் பசுக்களெல்லாம் இப்போது துவைனவனத்தில் இருக்கின்றன. இப்போது அவை பத்திரமாக இருந்தாலும் எந்த நிமிஷத்தில் அவற்றைக் கொடிய மிருங்கள் தாக்கும் என்ற பயமே உள்ளது'' என்றான்.

அப்போது கர்ணனம் சகுனியும் ''அந்தப் பசுக்களைக் காக்க வேண்டும். அதற்காக துரியோதனன் கொடிய மிருகங்களை வேட்டையாட அங்கு செல்ல வேண்டும். அவற்றைத் தக்க முறையில் பாதுகாக்கவும் ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும்'' என்றார்கள். திருதராஷ்டிரனும் ''பசுக்களைக் காக்க வேண்டியது நம் கடமைதான். ஆனால் பாண்டவர்கள் இருக்கும் துவைதவனத்திற்கு துரியோதனனையும் அவனது வீரர்களையும் அனுப்பினால் அவன் பாண்டவர்களிடம் எதாவது சச்சரவு செய்வானே என்றே பயப்படுகிறேன். அது விபரீதமானால் பாண்டவர்களோடு சண்டை போட வேண்டும். அப்போது பீமன் துரியோதனனை லேசில் விட்டு வைப்பானா? அர்ஜுனன் வேறு தேவலோகம் போய் விட்டு புதிய அஸ்திரங்களைப் பெற்று வந்திருக்கிறானாம். அதனால் பசுக்களைக் காக்க துரியோதனனை அனுப்பாமல் வேறு யாராவது அனுப்பலாம்'' என்றான்.

சகுனியும் ''நாங்களும் துரியோதன

னுடன் போகிறோம். அவன் பாண்டவர்களோடு எவ்வித சச்சரவும் செய்யாதபடி பார்த்துக் கொள்கிறோம். பாண்டவர்கள் இருக்கும் பக்கமே போகவும் மாட்டோம். எங்கள் வேலை பசுக்களைக் கொடிய மிருகங்களிடமிருந்து காப்பதுதான். பாண்டவர்களும் எம்மைப் பார்த்து வந்து சச்சரவிட மாட்டார்கள். அவர்கள் மிகவும் நல்லவர்கள். இதை நீங்களும் அறிவீர்களே'' என்றான்.

திருதராஷ்டிரனும் ''ஆம். பாண்டவர்கள் வலிய வந்து வம்பு செய்ய மாட்டார்கள் தாம். நீங்களும் பாண்டவர்கள் இருக்கும் இடத்தின் பக்கம் கூட போகப் போவதில்லை என்று கூறுகிறீர்கள் அதனால் துரியோதனன் தன் ஆட்களோடு துவைத வனத்திற்குப் போய் பசுக்களைப் பாது காக்கட்டும். கொடிய மிருகங்களை வேட்டையாடட்டும்'' என அனுமதி அளித்தான். துரியோதனனுக்கும் துச்சாதனனுக்கும் சகுனிக்கும் கர்ணனுக்கும் ஒரே சந்தோஷம். உடனே துவைத வனத்திற்குச் செல்லப் பெருத்த அளவில் ஏற்பாடுகளைச் செய்யலானார்கள்.

துரியோதனன் மிகுந்த படாடோபமாய் மிகுந்த ஆர்ப்பாட்டத்தோடு யானை, குதிரைப் படைகளுமாக ஏதோ ஒரு போருக்குப் போகிறவன் போலப் கர்ணன், சகுனி, தன் சகோதரர்கள் என யாவரையும் அழைத்துக் கொண்டு துவைத வனத்திற்குச் சென்றான். துவைத வனத்தில் பாண்டவர்கள் ஒரு குளக்கரையில் தம் குடிலை அமைத்து அதில் வசித்து வந்தார்கள். துரியோதனன் பாண்டவர்கள் இருக்கும் கரைக்கு எதிர்க்கரையில் கூடாரங்



களைப் போடுமாறு தன் ஆட்களுக்குக் கட்டளை இட்டான்.

துரியோதனன் குளக்கரையை அடைந்த போது தருமர் ஒரு யாகத்தைச் செய்ய தீக்ஷை மேற்கொண்டு அமர்ந்திருந்தார். துரியோதனனின் ஆட்கள் குளக்கரையில் கூடாரங்களை அமைக்க முயன்ற போது அக்குளத்திற்குக் காவலாக இருக்கும் கந்தர்வ வீரர்கள் அங்கு வந்து ''இங்கு யாரும் கூடாரங்களைப் போட்டுக் தங்கக் கூடாது. இது எங்கள் எஜமானரின் கட்டளை. எனவே உங்கள் சாமான்களை எடுத்துக் கொண்டு இங்கே இருந்து போய் விடுங்கள். இது எங்கள் எச்சரிக்கை'' என்றார்கள்.

உடனே கௌரவப் படை வீரர்கள் ஓடிப் போய் துரியோதனனிடம் கந்தர்வர்களின் எச்சரிக்கையைக் கூறினார்



அவரது சக்தி உங்களுக்குத் தெரியாது. வீண்வம்பை விலைக்கு வாங்காதீர்கள். மரியாதையாக இங்கிருந்து போய் விடுங்கள்'' என்று கூறினார்கள்.

கௌரவப் படை வீரர்கள் மறுபடியும் துரியோதனனைக் கண்டு கந்தர்வர்கள் கூறியதைச் சொல்லவே. அவனும் புருவங்களை நெறித்து! ''என்னை இங்கிருந்து போகச் சொல்ல இந்த கந்தர்வர்கள் யார்? நீங்கள் நம் படைகளோடு போய் அவர்களைத் தாக்கி விரட்டுங்கள்'' என்று கர்ஜித்தான். கௌரவப் படை கந்தர்வர்களை தாக்கச் சென்ற போது கந்தர்வ மன்னன் சித்திரசேனனே அங்கு வந்திருந்தான். அவன் கௌரவப்படையைத் துரத்தி அடித்து விரட்டினான். இதைத் தொலைவிலிருந்து பார்த்துக் கொண் டிருந்த கர்ணன் துரியோதனன் பாராட்டும் விதத்தில் கந்தர்வர்களைத் தாக்கினாலும் கந்தர்வர்கள் நூற்றுக் கணக்கில் வந்து அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். கடும் சண்டை நடந்தது.

கள். அதைக் கேட்ட துரியோதனன் கோபம் கொண்டு ''அந்த கந்தர்வப் பயல்களைக் கதறக் கதற அடித்துத் துரத்துங்கள் அவர்கள் யார் நம்மைத் தடுப்பதற்கு?'' என கர்வத்தோடு கட்டளை இட்டான். வீரர்களும் திரும்பிப் போய் கந்தர்வர்களிடம் ''எங்களது துரியோதன மகாராஜா இங்கேதான் கூடாரம் அடித்துத் தங்கப் போகிறார். அதனால் நீங்கள் மரியாதையாகப் போய் விடுங்கள். இல்லாவிட்டால் உதைத்து விரட்டுவோம்'' என்று கூறினார்கள்.

கந்தர்வ வீரர்கள் அது கேட்டு பலமாகச் சிரித்து ''அது யார் துரியோதன மகராஜா? எங்கே இருக்கிறான் அவன்? இந்த உருட்டல் மிரட்டல்களுக்கெல்லாம் பயந்து விட மாட்டோம். எங்கள் மன்னர் சித்திரசேனர்.

சித்திரசேனன் மாயப் போர் புரிந்து துரியோதனனின் தம்பிகளை விரட்டி விட்டு தனியாக நின்ற கர்ணனோடு போர் புரிந்தான். கர்ணனின் தேர் சுக்கல் சுக்கலாகியது. அதனால் அவன் விகர்ணனின் தேரில் ஏறி அங்கிருந்து ஓடிப் போனான். துரியோதனன் கந்தர்வர்களிடம் அகப்பட்டுக் கொண்டான். சித்திரசேனன் அவனைப் பிடித்துக் கட்டி இழுத்துச்சென்றான். மற்ற கந்தர்வர்கள் துரியோதனனின் தம்பிகளையும் அவர்களது மனைவிகளையும் சிறைப் பிடித்தார்கள்.

தம் தலைவர்கள் கந்தர்வர்களிடம் சிறைப்பட்டது கண்டு பயந்து ஓடிய கௌரவப் படை வீரர்கள் எதிர்க்கரையிலிருந்த தருமரிடம் போய் ''ஐயா, கௌரவ அரசகுமாரர்களையும் அவர்களது மனைவிகளையும் கந்தர்வர்கள் சிறைப்படுத்தி விட்டார்கள். அவர்கள் சிறைப்பட்டவர்களை கந்தமாதனப் பர்வதப் பகுதிக்குக் கொண்டு செல்லப் போகிறார்கள். இப்போது நீங்கள்தாம் அவர்களை கந்தர்வர்களிடமிருந்து விடுவிக்க வேண்டும்'' என்று வேண்டினார்கள்.

பீமன் அதைக் கேட்டு பலமாகச் சிரித்து ''ஆகா! கந்தர்வர்கள் எதைச் செய்ய வேண்டுமோ அதைத்தான் செய்திருக்கிறார்கள். இங்கு வந்து அந்த கௌரவர்கள் வாலாட்ட நினைத்தார்கள். கந்தவர்களே அதை ஒட்ட நறுக்கி விட்டார்கள்'' என்றான் மகிழ்ச்சி ததும்ப. தருமரோ பீமனைக் கடிந்து கொண்டு ''பீமா! இது வேடிக்கை பேச்சுக்கான நேரமல்ல. கௌரவர்கள் நம் சகோதரர்கள் அவர்களுக்கும் நமக்கும் ஆயிரம் மனஸ்தாபங்கள் இருந்தாலும் அவர்களை யாராவது தாக்கினால் அந்த எதிரி நமக்கும் எதிரியே. நீ, அர்ஜுனன், நகுலன், சகாதேவன் ஆகிய நால்வரும் போய் கந்தர்வர்களிடம் நல்ல விதமாய் பேசி துரியோதனனையும் அவனுடன் சிறை பிடிக்கப்பட்டவர்களையும் மீட்டு வாருங்கள். நான் யாகத்தில் இருப்பதால் இங்கிருந்து நகர முடியாது.'' என்றார்.

அர்ஜுனன் அவர் கூறியபடியே செய்வதாகக் கூறி பீமனையும் மற்ற சகோதரர்களையும் அழைத்துக்




கொண்டு ரதங்களில் ஏற்றிக் கொண்டு வேகமாக கந்தர்வர்கள் சென்ற திசையில் சென்றான். பாண்டவர்கள் தம்மைப் பின் தொடர்வதைக் கண்டு கந்தர்வ மன்னன் நின்றான். அர்ஜுனன் அவனை அணுகி ''நீங்கள் பிடித்து வைத்திருக்கும் எம் சகோதரர்களை விட்டு விடுங்கள். இது என் தமையனார் தருமரின் கோரிக்கை'' என்றான்.

சித்திரசேனனும் ''இந்த கௌரவர்களைப் பிடித்து வர எனக்குக் கட்டளை இட்டது தேவேந்திரன்தான். அதைத்தான் நான் செய்கிறேன்'' என்றான். அர்ஜுனனும் ''நீங்கள் கௌரவர்களோடு அவர்களது மனைவிமார்களையும் அல்லவா சிறைப் பிடித்திருக்கிறீர்கள்? ஸ்திரீகளைச் சிறை பிடிப்பது சரியா? உங்

களிடம் நல்ல விதமாகப் பேசி எல்லோரையும் விடுவித்து வர என் தமையனார் கூறினார். நீங்கள் அவர்களை விடுதலை செய்யாவிட்டால் எங்களோடு போரிட வேண்டிவரும்'' என்றார்.

சித்திரசேனனும் ''அப்படியானால் வீண் பேச்சு எதற்கு? தாராளமாகப் போர் புரியலாமே'' எனவே பாண்டவர்களுக்கும் கந்தர்வர்களுக்குமிடையே போர் மூண்டது. கௌரவர்களைப் பிடித்தது போலவே பாண்டவர்களை எளிதில் பிடித்து விடலாம் எனக் கந்தர்வர்கள் எண்ணினார்கள். ஆனால் அர்ஜுனன் எய்த அம்புகள் அவர்களது ஆயுதங்களையெல்லாம் பயனற்றுப் போகச் செய்து விட்டன.

அப்போது சித்திரசேனன் ''அர்ஜுனா! என்னைத் தெரியவில்லையா? நான்தான் உன் நண்பன் சித்திரசேனன். இந்தக் கௌரவர்கள் உங்கள் முன் தங்கள் பெருமையைக் காட்டி உங்கள் மனம் வருந்தச் செய்ய முயன்றார்கள். இதை அறிந்த தேவேந்திரன் எங்களை அனுப்பி இவர்களைப் பிடித்து வரச் சொன்னார்'' என்றான். அர்ஜுனனும் ''இவர்கள் எவ்வளவு கொடியவர்களானாலும் எங்கள் சகோதரர்களே. இவர்களை விடுவித்துக் கொண்டு வரும்படி என் தமையனார் எனக்குக் கட்டளை இட்டார். எனவே நீயே வந்து அவருடன் பேசுவது நல்லது'' என்றான்.

சித்திரசேனனும் அர்ஜுனனுடன் தருமர் இருக்கும் இடத்திற்குச் சென்றான். அவரிடம் அவன் நடந்ததை எல்லாம் கூறவே அவரும் ''உங்களைக் கண்டதில் மகிழ்ச்சியே. நீங்கள் கௌரவர்களைக் கொல்லாமல் சிறை பிடித்தது எம் பாக்கியம். அவர்களை விடுதலை செய்யுமாறு கேட்டுக் கொள்கிறேன்'' என்றார். சித்திரசேனனும் தருமர் வேண்டியபடியே கௌரவர்களையும் தான் சிறைப் பிடித்த மற்ற எல்லோரையும் விடுதலை செய்து விட்டுத் தன் பரிவாரங்களுடன் சென்று விட்டான்.

தருமரும் துரியோதனனைத் தம் மருகே அழைத்து ''இந்த மாதிரி இனிச் செய்யாதே. இப்படியெல்லாம் செய்தால் தீமைதான் விளையும். நடந்ததற்குக் கவலைப்படாமல் எல்லோரையும் அழைத்துக் கொண்டு ஊருக்குப் போ'' என்றார்.



# அம்புலிமாமா செய்திகள்

## தபால் தலைகளில் அன்னை தெரெஸ்ஸா

அன்னை தெரெஸ்ஸாவுக்கு 1975ல் அமைதிக்காக நோபல் பரிசு கிடைத்தது. 1980ல் நம் அரசு மிக உயரிய 'பாரத ரத்ன' விருதை அவருக்கு அளித்தது. அதன் பின் அவரை கௌரவிக்க அவரது படம் கொண்ட தபால் தலைகளை வெளியிட்டது. அவர் நோபல் பரிசு பெற்ற பின் ஸ்வீடன் நாடு அவரது படம் கொண்ட தபால் தலைகளை வெளியிட்டது. இப்போது இத்தாலியில் மிகப் பழைய குடியரசு நாடாகக் கருதப்படும் ஷான் மரீனோ அன்னை தெரஸ்ஸாவை கௌரவிக்க 'யூரோபா' என்ற தபால்தலையை வெளி யிட்டுள்ளது. இதில் அவரது புகைப் படத்திற் குப் பதிலாக பிரபல திரைப் பட நடிகை கீனா லோலோப்ரிகிடா




வரைந்த அன்னை தெரெஸ்ஸாவின் படம் அவரது கையெழுத்துடன் வெளியிடப்பட்டுள்ளது. மதர் தெரெஸ்ஸாடி கல்கத்தா என்று பெயருடன் வெளியிடப் பட்ட இந்த தபால் தலை மதிப்பு 750 லீரா. 1975ல் உலக உணவுக் கழகம் ஏற்படுத்திய சீரீஸ் மெடலின் ஒரு பக்கம் அன்னை தெரெஸ்ஸாவின் உருவம் பொறிக்கப் பட்டுள்ளது இது எல்லோருக்கும் உணவு என்ற குறிக்கோளுடன் பசி பிணியைப் போக்க முயல்பவருக்கு அளிக்கப்படுகிறது.

## மாணவர் தொகை பெருகியது

கல்கத்தாவின் செய்த பாயிண்ட் உயர்நிலைப் பள்ளி நாற்பத்து மூன்று வருடங்களுக்கு முன் 17 மாணவர்களைக் கொண்டு தான் ஆரம்பிக்கப் பட்டது. ஆனால் இன்றோ அதில் 12,000 மாணவர்கள் படிக்கிறார்கள்.

## சினிமா வெறி

மிதுன் தேவாங்கன் என்பவர் மும்பையின் ஒரு ஹோட்டல் சமையல்க்காரர். அண்மையில் மிக வெற்றிகரமாக ஓடிய ஒரு ஹிந்தி திரைப் படத்தை இவர் ஒரே திரையரங்கில் தொடர்ந்து 200 முறை பார்த்தாராம். இதற்கு இவர் செலவு செய்து பணம் ஐயாயிரம் ரூபாய் இன்றும அதே படத்தை எங்கு பார்க்க வாய்ப்பு கிடைத்தாலும் பார்க்கச் சலிப்பதே இல்லையாம்.

## அரிய கிருஸ்துமஸ்

பௌர்ணமியும் கிருஸ்துமஸும் சேர்ந்து வருவது மிக அரிது. சென்ற டிசம்பரில் அப்படிப்பட்ட அரிய கிருஸ்துமஸ் வந்தது. கடந்த இருபது நூற்றாண்டுகளில் இப்படிப்பட்ட அரிய கிருஸ்துமஸ் 70 தடவைகளே வந்துள்ளன. இந்த 20வது நூற்றாண்டில் 1901, 1920, 1931, 1977, 1996 ஆண்டுகளில் பௌர்ணமியன்று கிருஸதுமஸ் சேர்ந்து வந்தது. இனி மறுபடியும் பௌர்ணமியும் கிருஸ்துமஸும் சேர்ந்துவர 19 ஆண்டுகளாகும். 2015ல் தான் இத்தகைய அரிய கிருஸ்துமஸ் வருகிறது.

அம்புலிமாமா அனுபந்தம் - 100

நம் நாட்டு மரங்கள்

# முந்திரி

உலகில் முந்திரி வியாபாரத்தில் முதலாவது இடத்தைப் பெற்றுள்ள நாடு நம் நாடே உலகில் இதன் வியாபாரத்தில் 90 சதவீதம் நம் நாட்டுடையதே. முந்திரிப் பருப்பு எவ்வாறெல்லாம் இனிப்புப் பண்டங்களில் பயன்படுத்தப்படுகிறது என்று கூறத் தேவையே இல்லை. ஏனெனில் இது பற்றி எல்லோருக்குமே தெரியும்.

நானூறு ஆண்டுகளுக்கு முன் முந்திரியைப் போர்த்துக்கீசியர் பிரேஜில் நாட்டிலிருந்து நம் நாட்டிற்குக் கொண்டு வந்தார்கள். தென் மாநிலங்கள் அனைத்திலும் இது நிறைய விளைகிறது என்றாலும் மேற்குக் கடற்கரைப் பகுதியில் மும்பயிலிருந்து கன்யாகுமரி வரை இது மிக அதிகமாக வளர்கிறது. நம் நாட்டின் மொத்த விளைச்சலில் 70 சதவீதம் இப்பகுதியில் மட்டும் கிடைக்கிறது. அதிக வெப்பமும் குளிரும் இல்லாத மணல் பிரதேசத்தில் இது நன்கு விளைகிறது.

அடர்த்தியாய் 15 - மீடர் உயரம் வளரும் இம்மரங்கள் 30-40 ஆண்டுகள் வரை பட்டுப் போகாமல் உள்ளன. இவற்றின் இலைகள் அழகாயும் அகலமாயும் உள்ளன. மஞ்சள் பச்சை சிவப்பு நிறங்களில் இதன் பூக்கள் கொத்துக் கொத்தாய் டிசம்பரிலிருந்து மார்ச் மாதம் வரை பூக்கும். மார்ச்சில் காய்கள் காய்க்கும். காய்கள் முதிர்ந்து பழுக்க 60-70 நாட்கள் பிடிக்கும். முந்திரிப் பழத்தில் முந்திரிக் கொட்டை பழத்தின் வெளியே நீண்டிருப்பது அதிசயத்திலும் அதிசயம். முந்திரிக் கொட்டை மீதுள்ள தோல் உறுதியாயும் லேசாயும் பச்சை நிறத்திலும் இருக்கும். சில முதிர்ந்து ஊதா நிறத்திலும் இருக்கும்.

சாதாரணமாக ஒரு மரம் ஒரு தடவையில் 30-35கி.கிராம் காய்களைக் கொடுக்கிறது முந்திரிப் பருப்பில் இரும்பு சத்தும், 'ஏ' விடமினும் நிறைய உள்ளதால் இது சத்தானதாக விளங்குகிறது. முந்திரிப் பருப்பைப் பச்சையாகவும் வறுத்தும் சாப்பிடுகிறார்கள்.

முந்திரித் தோலிலிருந்து எண்ணெயும் எடுக்கிறார்கள். இது மிகவும் விலை அதிகமான வணிக எண்ணெயாகும். முந்திரி மரப் பலகைகளை படகுகள் நிர்மாணிக்கவும் பெட்டிகள் செய்யவும் பயன்படுத்துகிறார்கள்.



# வாலகில்யர்கள்

தவ வலிமை பெற உடல் நன்கு வளர்ந்து உயர்ந்திருக்க வேண்டும் என்பது இல்லை. சப்த ரிஷிகளில் ஒருவரான கிருது என்ற முனிவரின் புதல்வர்களே இந்த வாலகில்யர்கள். கட்டை விரல் பருமனிலும் உயரமும் கொண்ட இவர்கள் அறுபதினாயிரம் பேர்கள். இவர்கள் ஒன்றாக இருந்து மரக்கிளைகளில் தலை கீழாகத் தொங்கி தவம் செய்பவர்கள்.

ஒருமுறை கஸ்யப பிரஜாபதி ஒரு யாகம் செய்யலானார். அதற்கு முனிவர்களும் தேவர்களும் வந்து உதவினார்கள். வாலகில்யர்களும் தம்மாலான உதவியாக உலர்ந்த குச்சிகளையும், மலர்களையும் எடுத்து வந்து கொடுத்தார்கள். இவற்றைச் சேகரிக்க கட்டை விரலளவிலிருந்த அவர்கள் தட்டுத் தடுமாறிய போது தேவேந்திரன் அவர்களைப் பார்த்துச் சிரித்தான். அதனால் வாலகில்யர்கள் கோபம் கொண்டு அந்த இந்திரனுக்குப் போட்டியாக வேறொரு இந்திரனைச் சிருஷ்டிக்கத் தவம் செய்யலானார்கள்.

இதைக் கண்டு இந்திரன் பயந்து அவர்களது தவத்தை நிறுத்தச் சொல்லும்படி கஸ்யபரிடம் வேண்டினான். கஸ்யபர் கூறிய தன் பேரில் வாலகில்யர்கள் தவம் செய்வதை நிறுத்தினார்கள். ஆனால் அவர்கள் தாம் செய்த தவ சக்தியை கருடனுக்கு அளித்தார்கள்.

பிறகு கருடன் அமிர்தம் கொண்டு வரச் சென்ற போது இந்திரன் அவனைத் தடுக்க முயன்றான். ஆனால் அதில் இந்திரன் தோற்றான். இதற்கு வாலகில்யர்கள் கருடனுக்குக் கொடுத்த சக்தியே காரணம். கருடன் ஒரு முறை ஒரு மரத்தின் மீது போய் அமர்ந்தான். அம்மரக் கிளைகளில் தலை கீழாகத் தொங்கி தவம் செய்து கொண்டிருப்பதை அவன் கவனிக்கவில்லை. அவன்மரக்கிளை மீது உட்கார்ந்த போது அது ஒடிந்து விழுந்தது. ஆனால் அதைத் தரை மீது விழ விடாமல் கருடன் பற்றி ஆகாயத்தில் பறந்து கஸ்யபரிடம் என்ன செய்வது என்று கேட்டான். அவரது யோசனையின் பேரில் அக்கிளையில் தொங்கிய வாலகில்யர்களை கந்தமாதனப் பர்வதத்தில் கொண்டு போய்ச் சேர்த்தான்.



# உங்களுக்குத் தெரியுமா?

1. முன்னூறு ஆண்டுகளாக ரஷ்யாவை ஆண்ட அரச குடும்பம் எது?
2. எந்நாட்டவர் ஷிண்டோ மதத்தைக் கடைப்பிடிக்கிறார்கள்?
3. ஐ.நா. கொடியிலுள்ள வண்ணங்கள் யாவை?
4. திமிங்கிலத்திற்கு எவ்வளவு தந்தங்கள் உள்ளன?
5. அதிகார பூர்வ பைபிள் எப்போது உபயோகத்தில் வந்தது?
6. தபேநதி எந்தக் கடலில் போய்ச் சேர்கிறது?
7. நம் நாட்டில் மிக உயரத்திலுள்ள சாலை எது?
8. பறவைகளுக்குப் பற்கள் உண்டா?
9. 'சப்தரிஷி'களின் பெயர்கள் என்ன?
10. 'ஆர்யபட்டர் யார்? அவர் எதற்குப் பெயர் பெற்றவர்?
11. நம் நாட்டில் மாநில ஆளுனராக இருந்த முதலாவது பெண்மணி யார்?
12. தெலுங்கில் வீரபத்திர விஜயம் என்ற காவியத்தைப் படைத்தவர் யார்?
13. இந்தியாவின் முதலாவது வைஸ்ராய் யார்?
14. திருக்குறளின் மூன்று பால்கள் யாவை?
15. பிரஞ்சுப் புரட்சியின் கோஷங்கள் யாவை?
16. விம்பிள்டன் விருதைப் பெற்ற முதலாவது நீக்ரோ விளையாட்டு வீராங்கனை யார்?

## விடைகள்

1. ரோமனோபியர்கள்.
2. ஜப்பான்.
3. நீலம், வெள்ளை.
4. 200.
5. 1611.
6. கருங்கடல்.
7. ஜம்மு கஷ்மீரில் லேஹாவிலிருந்து சப்ரா பள்ளத்தாக்குவரை போக 18,300 அடி உயரத்தில் போடப்பட்ட சாலை.
8. இல்லை.
9. அந்திரி, ஆங்கீரசர், கிருது, மரீசி, புலகர் புலஸ்தியர், வசிஷ்டர்.
10. சந்திரகுப்த விக்கிரமாதித்தன் காலத்திய (கி.பி. 476 - 540) புகழ் பெற்ற கணித மேதை வானவெளிஇயல், இந் நாளைய அல்ஜீப்ராவை அறிமுகப் படுத்தியவர்.
11. சரோஜினி நாயுடு.
12. பொம்மர போதன.
13. லார்ட் கானிங்.
14. அறத்துப் பால், பொருட் பால், காமத்துப் பால்.
15. சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம்.
16. அமெரிக்காவைச் சேர்ந்த ஆல்தியாகிப்பன். 1956-57ல் 'விமன்ஸ் சிங்கில் டைட்டில்' பெற்றவர்.



# பேயை விரட்டிய பேய்!

காட்டூரில் கண்ணம்மா என்ற பெண்மணி இருந்தாள். அவளது கணவன் ஒரு விவசாயி. அவள் தன் குடும்பத்தை நன்கு கவனித்து வந்தாள். மகள், மகன், மாமியார் மாமனார் ஆகியோருடன் அவளும் அவள் கணவனும் சந்தோஷமாக வாழ்ந்து வந்தார்கள். ஒருநாள் திடீரென கண்ணம்மா ஏதோ நோயில் படுத்து விட்டாள். அவளுக்கு என்னென்னவோ வைத்தியம் செய்தும் அவள் குணமடையவில்லை.

அவ்வூர் மந்திரவாதி மாடசாமி தானே போய் கண்ணம்மாவைப் பார்த்து விட்டு ''இது மருந்தால் குணப்படாது. இவளை பேய் பிடித்து ஆட்டுகிறது. அந்தப் பேய் நம்மூர் நஞ்சக்கா பேய்தான்'' என்று கூறினான். நஞ்சக்கா என்ற பெயரைக் கேட்டதும் அங்கிருந்தவர்களும் கண்ணம்மாவின் கணவனும் பயந்து போனார்கள். அந்த நஞ்சக்கா ஐந்து ஆண்டுகளுக்கு முன் இருட்டும் போது ஏரிக்குப் போனவள் திரும்பி வரவே இல்லை. மறுநாள் காலை அவளது உடல் ஏரியில் மிதந்தது. ஊரில் சிலர் அவள் தற்கொலை செய்து கொண்டாள் என்றனர். சிலர் அவள் கால் இடறி ஏரியில் விழுந்து விட்டாள் என்றனர்.

அப்போது கண்ணம்மாவின் கணவன் மந்திரவாதியிடம் ''நஞ்சக்கா பேயாகவா ஆனாள்?'' என்று கேட்டான். மாடசாமியும் ''ஆமாம். பேயாகத்தான் ஆனாள். இந்த மாதிரி அகால மரணம் அடைபவர்கள் பேயாகி விடுவார்கள் என்று சாஸ்திரமே கூறுகிறது'' என்றான்.

மாடசாமி கூறியது முதல் கண்ணம்மா வலி தாங்காமல் கத்தும் போதெல்லாம் நஞ்சக்கா பேய்தான் கத்துகிறது என்று கூறலானார்கள். அதையெல்லாம் கேட்ட அவ்வூர் பள்ளி ஆசிரியர் பரமசிவம் கண்ணம்மாவின் கணவனிடம் ''இந்த மாட

—பாபநாசம் சாமா—

சாமி ஏதோ உளறினான் என்பதால் ஏன் கவலைப்படுகிறாய்? உன் மனைவிக்கு மூன்று வேளை நல்ல உணவு கொடு. உடம்பு வலுப் பெற அவள் முன் போலாகி விடுவாள்'' என்றார்.

ஆனால் மூட நம்பிக்கைகளை நம்பும் கண்ணம்மாவின் கணவனுக்கும் ஊராரில் பலருக்கும் பரமசிவம் சொன்னது பிடிக்கவில்லை. சிலர் ஆஞ்சனேய உபாசனை செய்யச்சொன்னார்கள். சிலர் அனுமார் வேஷம் போட்டுக்கொண்டு கண்ணம்மா முன் ஆடினார்கள். எதுவும் பயனளிக்கவில்லை. கண்ணம்மாவுக்கோ உடலில் வலி அதிகரிக்கவே அவள் கத்திக் கொண்டே இருக்கலானாள்.

இப்படி நிலைமை மோசமாவதைக் கண்ட கண்ணம்மாவின் கணவன் மந்திரவாதி மாடசாமியிடம் சென்றான். மாடசாமியும் ''கடைசியில் நீங்கள் என்னிடம் வருவீர்கள் என்பது எனக்குத் தெரியும். பேய், பிசாசுகளை விரட்டுபவர் என்னைத் தவிர இந்த வட்டாரத்தில் வேறு யார் இருக்கிறார்? என் மந்திர சக்திக்குக் கட்டுப்படாத பேயே இல்லை'' என்றான்.

கண்ணம்மாவின் கணவனோடு வந்த உறவினர்களில் ஒருவர் ''மாடசாமி! ஆஞ்சநேய உபாசனை செய்தும் கண்ணம்மாவைப் பிடித்த நஞ்சக்கா பேய் போகவில்லையே. அதற்கு அவ்வளவு சக்தியா?'' என்று கேட்டார். மாடசாமியும் ''இதெல்லாம் சின்ன விஷயம். இதற்கெல்லாம் ஆஞ்சநேயரிடம் போகக் கூடாது. நான் மந்திரம் போட்டு சாட்டையால் நான்கு அடிகள் பலமாகக் கொடுத்தால் அந்த நஞ்சக்கா பேய் ஓடியே போய் விடும். சரி. நான் பூஜை செய்து அதை விரட்டுகிறேன்'' என்றான். கண்ணம்மாவின் கணவனும் மற்றவர்களும் அவனை அழைத்துச் சென்றார்கள்.

அவன் கண்ணம்மாவின் வீட்டில்





நுழையும் போதே தன் பையிலிருந்த திருநீற்றை எடுத்து எங்கும் தூவினான். பிறகு ஓரிடத்தில் அமர்ந்து மஞ்சள் பொடி கொண்டும் குங்குமத்தைக் கொண்டும் கோலம் போட்டான். அதன் மீது கண்ணம்மாவை உட்கார வைத்து ஏதோ மந்திரங்களை உச்சரித்த வாறே தான் கொண்டு வந்த சில எலு மிச்சம் பழங்களை நறுக்கி அவற்றின் சாறைப் பிழிந்து கண்ணம்மாவின் தலையில் தேய்த்தான். பிறகு வேப் பிலைக் கொத்தை அவன் எடுத்துக் கொண்டு அவள் தலை மீதும் முதுகின் மீதும் அடிக்கலானான்.

அப்போது பட்டணத்தில் படித் துக் கொண்டிருந்த கண்ணம்மாவின் தம்பி சபாபதி தன் அக்காவின் உடல் நிலை மோசமாகி இருப்பது தெரிந்து அவளைக் காண வந்தான். அவன் அங்கு நடந்த கூத்தைப் பார்த்து மாட சாமியிடம் ''போதும், நிறுத்து. சும்மா அடிக்காதே'' என்று கத்தினான். மாட சாமியோ சபாபதியை வெறித்துப் பார்த்து ''பட்டணம் போய் நாலு எழுத்துப் படித்து விட்டால் இப்ப டித்தான் அவர்கள் போக்கு மாறும். நான் நாளை வருகிறேன். ஐந்து படி அரிசி, ஒரு கோழி, ஐந்து ரூபாய் தட்சிணை இவை எல்லாம் தயாராக வைத்திரு'' என்று கண்ணம்மாவின் கணவனிடம் கூறிவிட்டு அங்கிருந்து சென்றான்.

அவன் போன பிறகு சபாபதி தன் அத்தானிடம் எல்லா விவரமும் கேட்டு அறிந்தான் வேறு சிலரும் ஏரி யில் மூழ்கிப் போன நஞ்சக்கா பேயாகி விட்டதாகக் கூறினார்கள். சபாபதி மற் றும் பல விவரங்களையும் அவர்களி டம் கேட்டுத் தெரிந்து கொண்டான்.

மறுநாள் மாடசாமி நிறைய வேப் பிலைக் கொத்துகளுடன் கண்ணம்மா வின் வீட்டிற்கு வந்தான். அவன் தன் பையிலிருந்து திருநீற்றை எடுத்துத் தெளித்தவாறே'' ஜக ஜக ஜக்கம்மா, ஓடிப் போ! பக பக பச்சையம்மா, ஓடிப் போ!! நக நக நஞ்சக்கா, ஓடிப் போ'' என்று பலமாகக் கத்தியவாறே வேப்பிலைக் கொத்தைக் கையில் எடுத் துக் கொண்டு கண்ணம்மாவை அணுகினான்.

அப்போது சபாபதி இரு கைகளில் புளியங் கட்டைகளை எடுத்துக் கொண்டு ஆவேசத்துடன் அங்கு ஓடி வந்து ''அடே மாடசாமி! நான் நீ வரச் சொன்ன பேய்களில் ஒன்றல்ல, புளிய மரப் பூங்காவனத்தம்மா! என்னோடு தான் நஞ்சக்காவும் குளத்தில் மூழ்கிப்

போனாள். இன்னொருத்தி ராசக்காவும் எங்களோடு இறந்தவள். நீ நஞ்சக்காவுக்கு மட்டும் கோழி அறுத்துக் கும்பிடுகிறாயா? எங்களை அலட்சியமா செய்கிறாய்? இப்போது ராசக்கா உன் வீட்டில் நெருப்பு வைத்து எரிக்கப் போய்க் கொண்டிருக்கிறாள். நீ இப்போதே இந்த ஊரை விட்டு ஓடா விட்டால் நான் உன்னை இந்த புளியங் கட்டைகளாலேயே அடித்துக் கொன்று உன் உடலை நெருப்பில் வாட்டித் தின்று விட்டுப் போய் விடுவேன்'' என்று கத்தினான்.

அதைக் கேட்ட மாடசாமி நடு நடுங்கி ''நீ பூங்காவனத்தம்மாவா? உனக்குக் கோடி நமஸ்காரம். என்னை ஒன்றும் செய்யாமல் விட்டு விடு. நான் இந்த ஊரை விட்டே ஓடிப் போய் விடுகிறேன்'' என்று கதறியவாறே அங்கிருந்து மாடசாமி ஓட முயன்றான். ஆனால் சபாபதி அவனை ஓட விடாமல் தடுத்து தன் கையிலிருந்த புளியங்கட்டைகளால் நான்கு அடிகள் அடித்த பிறகே போக விட்டான். மாடசாமியும் தப்பினேன், பிழைத்தேனென அங்கிருந்து ஓடியே போய் விட்டான்.

அங்கிருந்தோர் எல்லோரும் இது ஏன்ன என்று ஆச்சரியத்துடன் பார்த்து நின்றார்கள். சற்று நேரத்திற்குப் பின் சபாபதி ஒரு சொம்பு தண்ணீர் குடித்து விட்டு அங்கேயே சிறிது நேரம் உட்கார்ந்திருந்தான். அப்போது கண்ணம்மாவின் கணவன் தன் மைத்துனன் சபாபதியிடம் ''சபாபதி! நஞ்சக்காவுடன் பூங்காவனத்தம்மாவுமா பேயானாள்? அவள் ஏன் உன்னைப் பிடித்துக் கொண்டாள்?'' என்ற கேட்டான்.

சபாபதியிடம் ''நம்புகிறவர்கள் இருக்கும் வரை இறந்து போனவர்களெல்லாம் பேயாக ஆனவர்களே. இதோ பாருங்கள். என் அக்காவுக்கு உடலில் பலம் குறைந்து விட்டது நல்ல ஆகாரமாகக் கொடுத்து அவளை ஓய்வு எடுக்கச் செய்யுங்கள். விரைவிலேயே உங்கள் மகனுக்குத் திருமணம் செய்து வைத்து வீட்டிற்கு மருமகளைக் கொண்டு வாருங்கள். நான் என் அக்காவுக்கு நல்ல வைத்தியம் பார்க்கப் பட்டணத்தில் ஏற்பாடு செய்கிறேன்'' என்றான். கண்ணம்மாவின் கணவனும் ''நீ சொல்வதே சரி'' எனக் கூறி மகிழ்ந்தான்.





# பஞ்சாங்கம் தயாரிப்பீர்

காட்டுப் புத்தூர் ஜமீன்தாரர் கனக சபேசர் தன் மகனுக்கு இளைய ஜமீன்தாரர் பட்டம் சூட்டும் விழாவை அறிவித்தார். நான்கு நாட்கள் நடக்கும் அந்த விழாவில் கலந்து கொண்டு பரிசுகளைப் பெற்றுக் கொள்ள இலக்கியப் படைப்பாளிகளும், பண்டிதர்களும் கவிஞர்களும் புரோகிதர்களும் கூடினர்.

ஜமீன்தாரரின் உதவியாளர்கள் பரிசளித்து கௌரவிக்கப் பட்டியல் போட்டுக் கொடுத்திருந்தார்கள். அவரவர்களின் தகுதிகளைப் பார்த்து அதற்கேற்ப வரிசைப்படுத்திப் பட்டியல்களைத் தயாரித்திருந்தனர். புரோகிதர்கள் பட்டியலும் தயாரிக்கப்பட்டிருந்தது.

பஞ்சு சாஸ்திரி என்ற புரோகிதர் தமக்குப் பெரிய பரிசாகக் கிடைக்குமென எண்ணிக் கொண்டு ஜமீன்தாரரின் மாளிகைக்கு வந்தார். ஆனால் அவரது பெயர் புரோகிதர்களின் பெயர் பட்டியலில் முதலில் இல்லாமல் கடைசியில் இருந்தது. இது அவருக்குப் பெரிதும் வேதனையை அளித்தது.

தான் வேதங்களை நன்கு கற்றும் எல்லாம் தெரிந்த புரோகிதர் என்று பெயர் பெற்றிருந்தும் தன் பெயர் பட்டியலில் கடைசியில் இருந்ததால் அவருக்கு மிகவும் கோபம் வந்து விட்டது.

பரிசை வாங்க வருமாறு பஞ்சு சாஸ்திரி கடைசியில் அழைக்கப்பட்டார். அவருக்கு நான்கு ரூபாய்கள் கொடுக்கப்பட்டன. அதை வாங்கிக் கொண்ட அவர் ''ஐயா! நீங்கள் பரிசளிக்கப் போகிறீர்களென்று இந்த நான்கு நாட்களாக நான் காத்திருக்கவில்லை. நான் என் ஊரில் நான்கு வீடுகளுக்குப் போய் திதி, வாரம் நட்சத்திரம் முதலியவற்றைச் சொல்லி இதைவிட அதிகம் சம்பாதித்து விடுவேன். உங்கள் கிராமங்கள் ஒன்றிலிருந்து

—பாலாஜி கிருஷ்ணன்—

வந்த புரோகிதர் உங்களை ஆசீர்வ தித்து இதைக் கொடுத்தார் என்று எண்ணி இதை ஏற்றுக் கொள்ளுங்கள்'' எனக்கூறி இளைய ஜமீன்தாரரை ஆசீர் வதித்து அந்த நான்கு ரூபாய்களை அவர் கையில் கொடுத்தார்.

பஞ்சு சாஸ்திரியின் இந்த கர்வத் தைக் கண்டு அங்கிருந்தவர்கள் கோப மடைந்தார்கள். கற்றறிந்த ஒருவர் இப் படியா பண்பற்ற முறையில் நடந்து கொள்வார் என்று சிலர் முணுமுணுத் தார்கள். வேறு சிலர் அவரை முறைத் துப் பார்த்தார்கள். இதையெல்லாம் கவனித்த ஜமீன்தாரர் மட்டும் சாந்த மாக ''ஒரு ஜமீன்தாரர் ஒரு நதியைப் போன்றவர். அதில் தண்ணீர் மொள்ள வந்தவர்களுக்கு அவரவர்கள் கொண்டு வந்துள்ள பாத்திரத்தின் அள விற்குத்தான் தண்ணீர் கிடைக்கும். நாமும் யார் யாரைப் பற்றி எவ்வளவு கேட்டோமோ அதன்படி பட்டியல் தயாரித்தோம். அதன்படி பரிசளித் தோம். நீங்கள் உங்கள் தகுதி இதை விட மேலானது எனக் கூற இவ்வாறு செய்வது சரியல்ல'' என்றார்.

அது கேட்டு பஞ்சு சாஸ்திரி வெட் கப்பட்டு ஜமீன்தாரரிடம் மன்னிப்புக் கோரினார். ஜமீன்தாரரும் அவரைப் பரீட்சித்து விட்டு அவர் நன்கு படித்த வரே என்று பாராட்டி அவருக்கு நிறை யப் பரிசளித்து அனுப்பினார். பஞ்சு சாஸ்திரியும் மகிழ்ச்சியுடன் தம் ஊருக்கு வந்தார்.

பஞ்சு சாஸ்திரியின் இந்த செயல் ஊராருக்குத் தெரிந்தது. அதனால் ஊரார் அவரைப் பெரிதும் மதிக்க லானார்கள். ஜமீன்தாரரின் சபை யிலேயே தைரியமாக அவரை மட்டம் தட்டியவர் என்று ஊரார் பேசி அவ ருக்கு பயந்து மரியாதை காட்ட லானார்கள். இதை கண்ட பஞ்சு சாஸ்திரிக்கு கர்வமும் அதிகரித்தது. இதனால் அவர் தாம் வாங்கும் தட் சிணைத் தொகையை அதிகரித்து



விட்டார். இப்படி இருக்கையில் அதே ஊர் கவிஞர் காளமேகத்தின் தந்தை இறந்து விட்டார். அவர் ஜமீன்தாரரின் ஆஸ்தான கவிஞராதலால் ஜமீன் தாரரே அவரது ஈமச் சடங்குகளின் போது வந்திருந்தார். அவர் கவிஞருக்கு ஆறுதலும் கூறினார். அப்போது காளமேகம் ''பிரபுவே! இந்த வீட்டை சிரமப்பட்டு என் தந்தை கட்டினார். அவர் இறந்த நட்சத்திரப்படி நான் இந்த வீட்டை விட்டு உடனே போய் நான்கு மாதங்களுக்குப் பிறகுதான் வர வேண்டுமென புரோகிதர் பஞ்சு சாஸ்திரி கூறுகிறார். என் தந்தை இறந்த பத்தாவது நாள் கர்மம் கூட இந்த வீட்டில் செய்ய முடியவில்லையே என்றுதான் வருத்தப் படுகிறேன்'' என்றார்.

ஜமீன்தாரர் உடனே பஞ்ச சாஸ்திரியை அழைத்து ''இந்த வீடு சாஸ்திரப்படி கட்டப்பட்டது. இந்த வீடு எனக்குப் பிடித்து போயிற்று. அமைதியான சூழ்நிலை இங்கு உள்ளது. இங்கு நான் கொஞ்ச நாட்கள் தங்கி இருந்துவிட்டுப் போய் விடலாமென நினைக்கிறேன் ஆனால் இதில் இருக்கக் கூடாதென்றும், இதை விட்டுக் கவிஞர் போய் விட வேண்டுமென்று சொன்னீர்களாமே. இதைத் தவிர வேறு வழியே இல்லையா?'' என்று கேட்டார்.

பஞ்சுசாஸ்திரியும் குழைந்தவாறே ''இதற்கெல்லாம் பரிகாரங்கள் சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கின்றன. அதைப் பார்த்து செய்து விட்டால் கவிஞர்காளமேகம் தாராளமாக இதே வீட்டில் இருக்கலாம்'' என்றார். ஜமீன் தாரர் புன்னகை புரிந்தவாறே உடனே பரிகாரம் செய்யுமாறு பஞ்சுசாஸ்திரிக்குக் கட்டளை இட்டார். பரிகாரமெல்லாம் முடிந்ததும். அவர் பஞ்சு சாஸ்திரியிடம் ''சாஸ்திரிகளே! இனி புதுப் பஞ்சாங்கம் கணிக்க உங்களை நான் நியமிக்கிறேன். சாஸ்திரத்தின் நெளிவு சுளிவுகளெல்லாம் உங்களுக்கு நன்கு தெரிந்திருக்கிறது, அதில் சுபகாரியம், பரிகாரம் பற்றி விவரமாக எழுதுங்கள் அதனால் யாருக்கும் எதற்கும் எவ்வித சந்தேகமும் இல்லாமல் எதற்கும் ஒரு பரிகாரம் இருக்கிறது என்பது தெரியட்டும்'' என்றார்.

பஞ்சு சாஸ்திரியும் தலையை ஆட்டினார்.





# இருட்டிலிருந்து வெளியே வா!

அரிசிப்பாளையத்தில் அவினாசி என்ற துணி வியாபாரி இருந்தான். அவனுக்கு அஞ்சுகம் என்ற மனைவியும், வாட்ட சாட்டமான மகனும் அழகிய மகளும் இருந்தனர். மகள் சரசுவை அவினாசி அடுத்த ஊர் நெல் வியாபாரி நஞ்சப்பனின் மகனுக்குத் திருமணம் செய்து அனுப்பி வைத்தான்.

இதற்குப் பின் அவிநாசி தன் மகன் ஆறுமுகத்தை வியாபாரத்தை கவனித்துக் கொள்ளச் சொன்னான். மகள் மாமனார் வீட்டில் சுகமாக இருக்க, மகன் வியாபாரத்தை நன்கு நடத்துவதும் கண்டு சந்தோஷப்பட வேண்டிய அவினாசி திடீரெனத் தனியாகத் தன் வீட்டில் ஒரு அறையில் உட்கார்ந்து கொண்டு ஏதோ கவலைப்படுபவன் போல இருக்கலானான்.

சில நாட்களில் அவன் சாப்பிடும் உணவின் அளவு குறைந்தது. வேளா வேளைக்கு அவன் சரியாகச் சாப்பிடாமலும் இரவில் சரியாகத் தூங்காமலும் இருந்ததால் அவனது குடும்பத்தினர் மிகவும் கவலைப்படலானார்கள். அவன் தன் மனைவியிடமும் கூடச் சரியாகப் பேசாமலும் இருந்தான்.

இதனால் பயந்து போன அவினாசியின் மனைவி பல வைத்தியர்களை அழைத்து வந்து காட்டி மருந்துகளைக் கொடுத்துப் பார்த்தாள். அவினாசி முன் போலாகி விடவில்லை. மந்திரம், மாந்திரீகம் என்றெல்லாம் பார்த்தும் எவ்விதப் பயனும் கிடைக்கவில்லை.

அவினாசியின் நிலை பற்றிக் கேள்விப்பட்ட அவனது சம்மந்தி நஞ்சப்பன் அவனைப் பார்க்க அரிசிப்பாளையத்திற்கு விரைந்து வந்தான். அவினாசியின் மனைவி நஞ்சப்பனிடம் தன் கணவன் எப்போது பார்த்தாலும் ஏதோ கவலைப்பட்டுக் கொண்டே இருப்பதைக் கூறினாள். அவள்

—பாலாஜி கிருஷ்ணன்—



''இவர் இந்த ஊருக்கு வந்து முதுகில் துணி மூட்டையைப் போட்டுக் கொண்டு துணி வியாபாரம் செய்த போது ஒரு சிறு வீட்டில் ஒண்டுக் குடித்தனம் இருந்தோம். அப்போது அவருக்கு கிடைத்த லாபம் மிகவும் குறைவானதே, அதற்குப் பின் அவர் சிறு துணிக் கடையை ஆரம்பித்தார். அது நன்கு நடக்கவே கடையும் பெரிதாகியது. வியாபாரமும் நன்கு நடந்து நிறைய லாபமும் கிடைத்தது. ஆனால் அப்போது இருந்த சந்தோஷம் இப்போது இந்தப் பெரிய வீட்டில் இல்லை. பணம் மட்டும் இருந்து விட்டால் போதுமா? மன நிறைவும் சந்தோஷமும் வேண்டாமா? இதற்கு நீங்கள்தான் ஒரு வழி சொல்ல வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டாள்.

அதையெல்லாம் கவனமாய்க் கேட்ட நஞ்சப்பன் சற்று யோசித்து விட்டு ''நீ கவலைப்படாதே. தைரியமாக இரு. இதற்கு நான் ஒரு வழி செய்கிறேன்'' என்று கூறி அவினாசியைப் பார்த்துப் பேசி விட்டுத் தன் ஊருக்குக் கிளம்பிச் சென்றான்.

இதற்கு ஒரு வாரத்திற்குப் பின் ஒரு நாள் காலை சரசு ஒரு பையுடன் கண்களில் நீர் ததும்ப அரிசிப்பாளையத்தில் தன் தந்தையின் வீட்டிற்கு வந்தாள். அதைக் கண்டு அவளது தாய் ''என்னம்மா இது? தனியாக வந்திருக்கிறாய்? உன் கூட உன் கணவர் வரவில்லையா? உங்களுக்குள் ஏதாவது மனத்தாங்கலா? எனக்கு விவராமாகச் சொல்.'' என்று கேட்கவே சரசுவும் ''அம்மா உன் மாப்பிள்ளைக்கு வியாபாரத்தில் பெரும் நஷ்டம் ஏற்பட்டு கடன்காரர்களின் தொல்லை அதிகமாகி விட்டது. அதனால் அவர் சன்னியாசியாகிப் போய் விட்டார்'' என்று கூறிக் கதறலானாள்.

இதைத் தன் அறைக்குள் இருந்தவாறே கேட்ட அவிநாசி சட்டெனவெளியே வந்து ''நீ கவலைப்படாதே சரசு. வியாபாரத்தில் நஷ்டம் ஏற்பட்டால் அதற்காக மனம் உடைந்து போய் சன்னியாசியாகி விடுவதா? வியாபாரத்தில் லாபமும் நஷ்டமும் மாறி மாறி வரத்தான் வரும். நீ கவலைப்படாதே. உன் கணவன் எங்கே இருந்தாலும் தேடிப் பிடித்து இழுத்து வந்து பழையபடி வியாபாரம் செய்ய வைக்கிறேன்'' எனக் கூறி நல்ல சட்டை, வேஷ்டி அணிந்து கொண்டு ஒரு வாடகை வண்டி அமர்த்திக் கொண்டு அடுத்த ஊருக்குப் போய்த் தன் சம்மந்தி நஞ்சப்பனைக்

கண்டான்.

அவன் உரத்த குரலில் ''நஞ்சப்பா! உன் மகனைப் பற்றி எல்லாம் தெரிந்து கொண்டேன். இப்போது நடந்து போனதைப் பற்றிக் கவலைப்படாமல் இனி என்ன செய்ய வேண்டுமென யோசிக்க வேண்டும். வா என்னோடு. முதலில் உன் மகனைத் தேடிக் கண்டு பிடித்து அழைத்து வரலாம்'' என்றான். இருவரும் அக்கம் பக்கத்து ஊர்களிலுள்ள மடங்களில் தேடிக் கொண்டே போய் முடிவில் ஒரு ஊரின் மடத்தில் சரசுவின் கணவனைக் கண்டுபிடித்து விட்டார்கள்.

நஞ்சப்பன் தன் மகனிடம் ஏதோ சொல்லப் போகையில் அவிநாசி குறுக்கிட்டு ''மாப்பிள்ளை! இதென்ன வேஷம்? இதெல்லாம் வியாபாரிகளான நமக்கு சரிபடாது. வியாபரத்தில் லாபமும் நஷ்டமும் ஏற்படத்தான் ஏற்படும். நீங்கள் வந்து வியாபாரத்தைத் தொடர்ந்து நடத்துங்கள். நான் வேண்டுமானால் பணம் கொடுக்கிறேன். கடனாக வாங்கிக் கொள்ளுங்கள். சாவகாசமாக அதை எனக்குத் திரும்பிக் கொடுக்க லாம்'' என்றான்.

பிறகு அவன் தன் மாப்பிள்ளையையும் நஞ்சப்பனையும் தன்னுடைய ஊருக்கே அழைத்துச் சென்றான். சரசு தன் கணவனைக் கண்டு சந்தோஷப் பட்டாள். அவினாசியும் தன் மகளுக்கும், மாப்பிள்ளைக்கும் புத்தாடைகளைக் கொடுத்ததோடு இருபத்தையாயிரம் ரூபாயும் கொடுத்து ''மாப்பிள்ளை! இதைக் கொண்டு மறுபடியும் வியாபாரத்தை ஆரம்பியுங்கள். உங்கள் தந்தையும் உதவுவார். வேண்டுமானால் நானும் அவ்வப்போது வந்து உதவுகிறேன்'' என்றான்.

நஞ்சப்பன் சிரித்துக் கொண்டே தன் மகனிடமிருந்து பணத்தை வாங்கி அவினாசியிடமே கொடுத்து ''சம்மந்தி! என் மகனுக்கு வியாபாரத்தில் எவ்வித நஷ்டமும் ஏற்பட்டு விட வில்லை. உங்களை உங்கள் இருட்டறையிலிந்து வெளியே வெளிச்சத்திற்குக் கொண்டு வர நானும் என் மகனும் சேர்ந்து செய்த தந்திரம் இது. இனியும் தனி அறையில் அடைப் பட்டிராமல் எல்லோருடன் கலகலப்புடன் பழகுங்கள்'' என்றான்.

அவினாசி அசட்டுச் சிரிப்புடன் நின்றான்!



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1997 மே மாத இதழில் வெளியிடப்படும்.



S.G. SESHAGIRI



MAHANTESH C. MORABAD

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ மார்ச் 30–ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/– பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை–600 026.**

---

## ஜனவரி மாதப் போட்டி முடிவு

*முதலாவது போட்டோ* : **உழைப்பின் நேர்த்தி கைகளில்!**

*இரண்டாவது போட்டோ* : **அன்பின் பூர்த்தி கண்களில்!!**

*பரிசு பெற்றவர்* : **கற்பகம் சரவணன், சென்னை - 94**

---




Printed by B.V. REDDI at Prasad Process private Ltd., 188, N.S.K. Salai, Madras - 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras - 600 026 (India), Controlling Editor: NAGI REDDI.

THE MOST ENDEARING GIFT YOU CAN THINK OF
FOR YOUR NEAR AND DEAR WHO IS FAR AWAY

# CHANDAMAMA



**Give him the magazine in the language of his choice—**
Assamese, Bengali, English, Gujarati, Hindi, Kannada, Malayalam, Marathi, Oriya, Sanskrit, Tamil or Telugu
**—and let him enjoy the warmth of home away from home.**

**Subscription Rates (Yearly)**

**AUSTRALIA, JAPAN, MALAYSIA & SRI LANKA**

By Sea mail Rs. **129.00** By Air mail Rs. **276.00**

**FRANCE, SINGAPORE, U.K., U.S.A., WEST GERMANY & OTHER COUNTRIES**

By Sea mail Rs. **135.00** By Air mail Rs. **276.00**

**Send your remittance by Demand Draft or Money Order favouring 'Chandamama Publications' to:**

CIRCULATION MANAGER **CHANDAMAMA PUBLICATIONS** CHANDAMAMA BUILDINGS
VADAPALANI MADRAS 600 026




Rs. 30/-




Rs. 40/-




Rs. 30/-




Rs. 30/-




Rs. 25/-




Rs. 30/-

## CHANDAMAMA BOOKS ARE ALREADY A LEGEND! THEY OPEN A NEW HORIZON ON THE WORLD OF LITERATURE FOR THE YOUNG

Added to the six titles by **Manoj Das** is the charming seventh–

**WHEN THE TREES WALKED**

by the inimitable story-teller **Ruskin Bond**




Rs. 30/-

Among the titles in the process of production are:

**STORY OF KRISHNA**
**STORY OF RAMA**
**STORY OF BUDDHA**



For details, write to:

**CHANDAMAMA BOOKS**
Chandamama Buildings
Vadapalani, Madras - 600 026.